# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி – தை

2025–பிப்ரவரி

இணையவழி மலர் 2 – இதழ் 6

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

தீபா ராஜேஸ்வரி

கோவிலூர்


## பொருளடக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

அலகாபாத் நகரத்தில் திரிவேணி சங்கமத்தில் மகா கும்பமேளா சிறப்புடன் நடைபெற்றுவருகிறது. நூற்று நாற்பத்துநான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறும் இந்த மகா கும்பமேளாவில் பல கோடிக் கணக்கான மக்கள் புனித நீராடி புண்ணியம் பெற்றுவருகிறார்கள். இது ஒருபுறம் இருக்க திருப்பதி நகரில் கோவில்களுக்கான கும்பமேளா இந்த (பிப்ரவரி) மாதத்தில் 17, 18, 19 ஆகிய நாட்களில் சர்வதேச டெம்பிள் கன்வென்சன–எக்ஸ்போ என்ற பெயரில் அதாவது சர்வதேச கோயில்களின் ஒருங்கிணைந்த மாநாடு மற்றும் கண்காட்சி (ITCX 2025) என்ற பொருளில் நடைபெற்றது. உலக அளவில் பதினேழுக்கும் மேற்பட்ட நாடுகளில் உள்ள கோவில்களின் பிரதிநிதிகள் இம்மாநாட்டில் கலந்து கொண்டனர். மேலும் இந்தியாவில் உள்ள 1581 கோயில்களின் நிர்வாகிகள் கலந்து கொண்ட மிகப் பெரிய மாநாடாக இது நடைபெற்றது.

நமது அழைப்பின்பேரில் நகரத்தார்களின் ஒன்பது கோயில்களில் இருந்தும் அனைத்து ஊர்களின் நகரக் கோயில்களில் இருந்தும் பொறுப்பாளர்கள் இம்மாநாட்டில் கலந்து கொண்டனர். ஏறக்குறைய இருநூற்றுக்கும் மேற்பட்ட கோயில் திருப்பணி நகரத்தார்கள் இதில் கலந்து கொண்டது பெருத்த மகிழ்ச்சியைத் தந்தது. கலந்து கொள்ளும் ஒவ்வொருவருக்கும் ரூபாய் 16,000 அளவில் கட்டணம்




இருந்த போதிலும் நகரத்தார்கள் அனைவருக்கும் இக்கட்டணத் திலிருந்து விலக்கு அளிக்கப்பட்டது. நாம் இவ்வமைப்பின் சார்பில் சென்ற முறை காசியில் நடைபெற்ற மாநாட்டில் கலந்து கொண்டுக் கோயில் நிர்வாகம், கட்டமைப்பு, நகரத்தார் கோயில் பணிகள் போன்றன குறித்துப் பகிர்ந்து கொண்டுத் தக்க ஆலோசனைகள் வழங்கிய நிலையில் இவ்வாண்டு நிர்வாகக் குழுவிலும் இடம் பெற்றோம். தமிழகத்தில் இருந்து அழைக்கப்பெற்ற ஒரே மடாதிபதி என்ற நிலையில் தமிழக அளவில் நமக்கு முக்கியத்துவம் ஏற்பட்டது. நம்முடைன் பழனி சாது சாமிகளையும், ஆன்மீக அறிஞர் சொ. சொ. மீ சுந்தரம் அவர்களையும் அழைத்துச் சென்றோம்.

முழுவதும் குளிரூட்டப் பெற்ற மிகப் பெரிய அரங்கம், இரு சிறிய அரங்குகள், பல்வகை கண்காட்சி அரங்குகள், பெரிய உணவுக் கூடம், வந்தோரை அழைத்துச் செல்ல வாகனங்கள், வாயில்கள் தோறும் காவலர்கள், உள்நுழைந்தாலும், வெளியில் வந்தாலும் அடையாள அட்டைப்பதிவு, உரிய நேரத்தில் தேநீர், பில்டர் காபி, நாள் முழுவதும் தண்ணீர் பந்தல், பெரிய பெரிய



கணினித் திரைகள் , பலவகை உணவு வகைகள், சலிக்காமல் உணவு பரிமாறும் பணியாளர்கள், தூய்மைப் பணியாளர்கள், மேடை நிர்வாகிகள், ஒலி ஒளி அமைப்பாளர்கள், மலர் அலங்காரப் பணியாளர்கள், காதுகளில் ஒயர்லஸ் கருவிகளுடன் கூட்டத்தை ஒழுங்குபடுத்தும் காவலர்கள்,



மாநாடு நடைபெறும் முதல் நாளில் பேருந்திலும், தொடர்வண்டியிலும், தனி ஊர்திகளிலும் வந்த நமது நகரத்தார்கள் நல்ல முறையில் ஒரே நட்சத்திர விடுதியில் தங்க வைக்கப்பட்டனர். முதல் நாளில் மூன்று மாநில முதல்வர்கள் கலந்து கொண்ட மாநாட்டுத் திறப்பு நிகழ்ச்சியில் அனைவரும் பங்கு கொண்டு மாநாட்டு அமைப்பினை அதன் முக்கியத்துவத்தை நகரத்தார்கள் தெரிந்து கொண்டனர். அன்று இரவு ஒன்பது மணியளவில் நகரத்தார்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து அமர சிறப்பான கூட்டம் நடைபெற்றது.

இக்கூட்டத்தில் நாம் நமது கருத்துகளை எடுத்துரைக்க நகரத்தார் பெருமக்கள் வாய்ப்பளித்தனர். நாம் நமது கோயில்களைச் சிறப்புடன் நிர்வகிக்க வேண்டும். மீண்டும் அனைவரும் நமது ஊர்களில் வந்து குடியேற வேண்டும். அப்போதுதான் நமது ஊரும் கோயில்களும் சிறப்படையும். முடிந்த அளவிற்கு

வேதங்களும் நாலாயிரமும் ஒலிக்க யாகம் நடைபெறும் பெருமாள் சன்னதி, உதவியாளர்கள் என்று உலகத் தரத்துடன் மிகச் சிறப்பாக மாநாடு நடைபெற்றது. மாநாடு முடியும் தருவாயில் ஒவ்வொரு நாளும் திருப்பதி ஏழுமலையான் தரிசன ஏற்பாடு மிகச் சிறப்பு. முதல்நாள் வருகை தந்த ஆந்திர மாநில முதலமைச்சர் மாண்புமிகு சந்திரபாபு நாயுடு அவர்கள் இம்மாநாட்டில் கலந்து கொள்ளுவோர் அனைவரும் எமது விருந்தினர்கள் அவர்களுக்கு திருமலை தரிசனம் உரிய முறையில் செய்து தரப்படும் என்று வாக்குறுதி அளித்தார். அதன்படியே திருமலைக்கு மாநாட்டிற்கு வந்த அனைவரும் உயரிய முறையில் இருபது நிமிடங்களில் திருமலைவாசன் தரிசனக் காட்சி கிடைத்தது.

நகரத்தார்கள் அவரவர் சொந்த ஊர்களில் குடியேறி அறத்தைப் பெருக்க வேண்டும். நாம் அனைவரும் ஊர்களுக்கு வந்து மீண்டும் குடியேறினால் அதுவே ஊரையும் கோவிலையும் நமது அறத்தையும் சிறப்பிக்கும் என்று நமது பேச்சினைத் தொடங்கி இன்னும் பல செய்திகளை விவாதித்தோம்.

நமது நகரத்தார் திருக்கோயில்களில் அதிக அளவு மக்களை வரச் செய்ய வேண்டும். அதற்கு இதுபோன்ற மாநாடுகள் உதவும். நம் கோயிலைப் பற்றி மற்றவர்கள் தெரிந்து கொள்ளவும், நாம் மற்ற கோயில்கள் பற்றி அறிந்து கொள்ளவும் இது போன்ற மாநாடுகள் உதவுகின்றன. நம்கோயில்களில் உள்ள பொதுவான சிக்கல்களைத் தீர்ப்பது எளிது. உரிய வழிபாடு செய்ய ஐயர் கிடைக்கவில்லை, சுயம்பாகம் கிடைக்கவில்லை என்பது எல்லாக் கோயில்களும் எதிர்நோக்கும் சிக்கல்கள். கோயில் அர்ச்சகர்களுக்கு நல்ல சம்பளம் தருதல் வேண்டும். அவ்வாறு தர முன்வந்து ஐயர்கள் கிடைக்கவில்லை என்றால் கோவிலூர் மடத்தைத் தொடர்பு கொள்ளுங்கள். உடன் ஏற்பாடுசெய்து தருகிறோம். இதுபோன்று ஓதுவார் இல்லை என்றாலும் மங்கள வாத்தியம் இல்லை என்றாலும் கோவிலூர் மடத்தைத் தொடர்பு கொண்டால் அதற்கான ஏற்பாடுகள் செய்து தரப்படும். நெய்வேத்தியத்திற்கும் உரிய முறையில் ஏற்பாடு செய்து தரப்படும். பல கோயில்களில் குறிப்பாக நமது ஊர் சமஸ்தானக் கோயில்களில் ஐயருக்கு 2000 ரூபாய் தரப்படுகிறது. இதில் எவ்வாறு வாழ்க்கை நடத்த இயலும். சமீபத்தில் திருப்பூவணம் கோயிலுக்குச் சென்றபோது அங்குள்ள சிக்கல்களைத் தீர்க்க நாம் உதவி செய்வதாக வாக்களித்தோம்.

இதுபோன்ற தனித்த சில கோயில் சிக்கல்களும் உண்டு. கண்டவராயன்பட்டியில் வள்ளியப்ப ஐயா என்பவர் பிள்ளையார் கோயிலையும் திருக்குளம் ஒன்றையும் அக்காலத்தில் கட்டியுள்ளனர். காலப் போக்கில் அவை சிதிலமடையத் தொடங்கின. தற்போது கோயில் திருப்பணி செய்யப்பட்டு மீட்டெடுக்கப்பட்டுவிட்டது. வள்ளியப்ப ஐயா குளம் சீரமைக்க வேண்டிய நிலையில் உள்ளது . இதற்காக அரசிடம் பல முறை விண்ணப்பத்தும் இயலாத நிலையில்,

கோவிலூர் மடாலயம் அப்பணிக்கு உரிய உதவிகள் செய்ய முன்வந்தது. மாவட்ட ஆட்சியர் அவர்களின் கவனத்திற்கும், அமைச்சர்கள் கவனத்திற்கும் கொண்டு சென்று அக்குளப்பணி செய்ய முயற்சிகள் மேற்கொள்ளப்பெற்றுள்ளன. இறையருளால் இப்பணி நிறைவடையும்.

பாதரக்குடி மடத்திற்கும் இளைய மாடதிபதி தேர்ந்தெடுக்கும் முயற்சியில் கோவிலூர் ஆதீனம் உதவி செய்தது. தக்க ஒருவரைத் தேர்ந்தெடுத்து அவரை அப்பணி செய்ய இறைவன் நல்வழி தந்துள்ளான்.

அடுத்து நமது நிர்வாகங்களில் தேர்தல் நடைமுறை வேண்டாம். காசி சத்திரம் முதல் ஊர்தோறும் உள்ள நகரத்தார் சங்கங்கள் வரை தேர்தல் நடைமுறையைக் கைவிட வேண்டும். அதற்குப் பதிலாக, திருவுளச் சீட்டு அடிப்படையில் பொறுப்பாளர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். குறிப்பாக காசி நகரச் சத்திரத்திற்கு இம்முறை தேர்தல் நடைமுறையைக் கைவிட பொதுக்குழு கூட்டப்பட வேண்டும். இதுபற்றி நாமும் தனித்த முறையில் காசிச் சத்திரப் பொதுக்குழுவிற்கும் தெரிவிக்க உள்ளோம். ஒவ்வொரு ஊர் நகரத்தார் பொதுக்குழு உறுப்பினர்களும் தேர்தல் நடைமுறையைக் கைவிடக் கோரித் தங்கள் கருத்தை முன் வைக்க வேண்டும். பொதுக்குழு கூட்டப்பெற்று, காசி சத்திரத்திற்குத் தேர்தல் நடைமுறை கைவிடப்பட வேண்டும். தேர்தலினால் பகை உணர்ச்சி தோன்றி பழிப்புகள் நேருகின்றன. இரண்டு லட்சம் என்ற எண்ணிக்கையில் உள்ள நகரத்தார்களின் ஒற்றுமை இதனால் பாதிக்கப்படுகிறது. தேர்தல் நடைபெறும் அனைத்து அமைப்புகளும் ஒற்றுமை இன்றி கட்சி பேதம் ஏற்படுகிறது. இதனைத் தவிர்க்க வேண்டும். காசிச் சத்திரத்தின் சொத்து மதிப்பால் அதற்குப் புகழ் இல்லை. நகரத்தார் செய்த அறப்பணிகளால்தான் புகழ். இதனைக் கருத்தில் கொண்டு செயல்பட வேண்டும்.

காசி விசுவநாதர் ஆலயத்தின் சார்பில் கோவிலூர் மடாலயத்தின் இணைவுடன் அன்னதானம் நாள் ஒன்றுக்கு 5000 பேருக்கு வழங்கப்படுகிறது. இதற்குக் காரணம் இருநூறு ஆண்டுகளுக்கும் மேலாக நகரத்தார் காசி முதலான இடங்களில் செய்துவரும் அறப்பணிகள்தான். இவ்வன்னதானத்தால்

வேதபாடசாலையில் பயிலும் மாணவர்கள், புற்றுநோய் மருத்துவமனையில் தங்கியுள்ள மக்கள், மற்றும் அவரின் துணையோர்கள் பயன்பெறுகின்றனர். இது இன்னமும் அதிகப்படுத்துவதற்கான முயற்சிகள் எடுக்கப்பெற்று வருகின்றன.

நமது நகரத்தார் சமுதாயத்தின் வளர்ச்சி என்பது எண்ணிக்கையிலும் வேண்டும். உடன் நகரத்தார் இளையோர்களின் திருமணத்தை நல்ல உறவு பந்தமாக நடத்த வேண்டும். ஊர்தோறும் திருமணம் ஆகவேண்டிய ஆண், பெண் விபரங்களைத் தெரிவித்து அவர்களின் திருமணங்கள் விரைவில் நடைபெற ஆவன செய்ய வேண்டும். அத்தோடு அவர்களின் மணவாழ்க்கை ஒற்றுமையாக ஆயிரம் காலத்துப் பயிராக வளர வழி வகை செய்ய வேண்டும். உடன் குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளவும் அவர்களுக்கு ஆலோசனை கூற வேண்டும். இரண்டு லட்சம் பேருக்குக் குறைவாக உள்ள இனம் உலக அளவில் ஓர் இனமாகக் கருதப்படாமல் ஒரு குழுவாகக் கருதப்படும்நிலை தற்போது உள்ளது. இந்நிலை நம் நகரத்தார்களுக்கு வந்துவிடாமல் காக்கவேண்டும். இளையோர்தம் திருமண வாழ்விற்கு ஏற்ற பொருத்தங்களைப் பெறக் கோவிலூர் ஆதீனம் சிறந்ததொரு ஏற்பாட்டைச் செய்ய உள்ளது.

அதுபோல வழக்குகளில் அதிக ஆர்வம் காட்டாமல் நீதி மன்றத்தை நாடாமல் நாமே நமக்குள் நமது சிக்கல்களைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். நமது இனத்தில் நல்ல சட்ட ஆலோசகர்கள் இருக்கிறார்கள். நீதி மன்றத்திற்குச் செல்வதற்கு முன்னால் அந்த சட்ட ஆலோசகர்களைக் கலந்து கொண்டு நமக்குள் தீர்வு காண வேண்டும். அதற்கான நீதி ஆலோசனை மையத்தை நாம் தொடங்க உள்ளோம்.

நகரத்தார்களின் திருக்கோயில் பணிகளால் மட்டுமே இன்று நாம் திருப்பதியில் ஒன்று கூடியுள்ளோம். கோவிலூரில் பலமுறை இதுபோன்ற கூட்டங்கள் நடைபெற்றபோதும் இக்கூட்டம் மிகச் சிறப்பான முறையில் அமைந்தது. இனிவரும் காலங்களிலும் அவ்வப்போது நாம் அழைக்கும் கூட்டங்களுக்கு அனைத்து நகரத்தார்களும் வருகை தர வேண்டும்.

இவ்வாறு நாம் பேசிய

நிலையில் பல நகரத்தார்களும் தம் கருத்துகளைப் பகிர்ந்து கொண்டனர். நாட்டரசன் கோட்டையில் நடைபெற்று வரும் வேதபாடசாலை வழியாக ஐயர்கள் திருக்கோயில்களுக்குக் கிடைக்க வாய்ப்பு உள்ளதாக அவ்வூர் நகரத்தார்கள் தெரிவித்தனர். மதுரை நகரத்தார் இளைஞர் சங்கத்தில் இனி தேர்தல் இல்லை என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டதாக நகரத்தார் இளைஞர் சங்க நிர்வாகி தெரிவித்தார். இளையோர் திருமணத்திற்கானத் திருமணத் தகவல் மையத்தினை மாத்தூர், தேவகோட்டை நகரத்தார்கள் செய்து வருவதாகத் தெரிவித்தனர். இவ்வாறு நகரத்தார்கள் பலரும் தம் கருத்துகளைத் தெரிவித்தனர்.

இதன்பிறகு பேசிய திரு. சொ. சொ. மீ சுந்தரம் அவர்கள், கோவிலூர் ஆதீனத்தின் சிறப்புகளை எடுத்துரைத்தார். கோவிலூர் மடத்திற்குள் நுழையும் எவரும் வண்டியிலோ, அல்லது வேறு பயண முறைகளிலோ சென்றாலும் அவற்றில் இருந்து இறங்கிக் கோவிலூர் மடத்திற்கு நடந்து செல்லும் நடைமுறை அக்காலத்தில் இருந்தது. குதிரைகளில் இறங்காது கோவிலூர் வந்த இருவர் நிலை என்னவென்று எல்லோருக்கும் தெரியும். ஆகவே கோவிலூர் மடமே நமக்குத் தலைமை சார்ந்த மடம். அந்த மடத்தின் பெருமையை உலக அளவில் புகழ் மிக்கதாக நமது சுவாமிகள் பரப்பி வருகின்றார். இவ்வாறு திரு.சொ. சொ.மீ சுந்தரம் ஐயா அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்.

இவ்வளவில் இச்சிறப்பான கூட்டம் பல முக்கிய தகவல்களைப் பரிமாறிக்கொள்ள வாய்ப்பளித்தது. இம்மாநாட்டில் முக்கிய அரங்கில் நாம் உரையாற்றும் வாய்ப்பும் அமைந்தது. திரு சொ. சொ. மீ சுந்தரம், திரு செல்வம் அழகப்பன், திரு கருப்பன் செட்டி ( வயிநாகரம் குடும்பத்தைச் சார்ந்தவர்) ஆகியோரும் இம்மாநாட்டில் உரையாற்றினர்.

நகரத்தார்களின் நலம் காக்கும் பணியில் நாளும் நாம் தொடர்வோம். அடுத்து காசி தமிழ்ச்சங்கமம் நிகழ்ச்சியில் நாம் கலந்து கொண்டு உரையாற்றினோம். அங்கு அகத்தியர் பற்றி நமது உரை அமைந்திருந்தது. அகத்தியரின் படைப்புகள் நம்மைப் பிரமிக்க வைக்கிறது. மருத்துவத்தில் அகத்தியரின் பங்கு முதன்மையானது. குறிக்கத்தக்கது. இவரின் முக்கியத்துவம் குறித்தும் நாம் சிந்திக்க வேண்டும்.

## காசி தமிழ்ச் சங்கமம்

காசி தமிழ்ச் சங்கமம் நிகழ்ச்சியின் வழியாக காசிக்கும் தமிழர்களுக்குமான உறவு, தொடர்பு அதிகரித்து வருகின்றது.இந்த ஆண்டு அந்த நிகழ்ச்சியில் சிறப்பு விருந்தினராகக் காலத்து கொள்ளும் வாய்ப்பு நமக்கு காசி விசுவநாதர் அருளினார். அதில் நம்மை அகத்தியர் குறித்துப் பேசப் பணித்தார்கள்.

அகத்தியர் இலக்கண ஆசான். மேலும் அவர் உருவாக்கியதாக பல மருத்துவ நூல்கள் கிடைக்கப்பெறுகின்றன. அவை அனைத்தும் பல்வேறு நோய்களைத் தீர்க்க வழிவகை சொல்லுகின்றன. மருந்தையும் சொல்லி, மருந்து செய்யும் முறையையும் சொல்லி அதன் செயல்படும் திறத்தையும் சொல்லி அகத்தியர் தம் மருத்துவ நூல்களைச் செய்துள்ளார். இவற்றைக் காசித் தமிழ்ச் சங்கம நிகழ்ச்சியில் பகிர்ந்து கொண்டோம். வடநாட்டில் இருந்து தென்னாட்டிற்கு வந்தவர் அகத்தியர். அவருக்கு இறைவன் காசியில்தான் தமிழ் அறிவித்ததாகத் தகவல் கிடைக்கிறது. அவரின் வழி தமிழ் வளமை பெறுகிறது. அவரால் தமிழ் மருத்துவமும் வளமை பெறுகிறது.

அகத்தியரின் மருத்துவ நூல்களாக அறுபதுக்கும் மேற்பட்ட நூல்கள் நமக்கு கிடைத்தன. இவை எதிர் கால நோய்களுக்கும் தீர்வு சொல்லுவனவாக விளங்குகின்றன. இதனைப் பரவலாக்கம் செய்ய வேண்டும். பல நூல்களுக்கு தக்க உரை இல்லாத நிலையில் அவை கூறும் கருத்துகளை எளிதில் புரிந்து கொள்ள இயலுவதில்லை. எனவே அகத்தியர் நூல்களுக்கு நல்ல உரை செய்யவும், அவற்றை ஆங்கிலம், இந்தி போன்ற மொழிகளில் மொழி பெயர்க்கவும் வேண்டும் என்ற எண்ணம் நமக்கு எழுந்தது.

இந்தச் சிந்தனை உடனடியாக ஆக்கம் பெறவும் இறைவன் வழிகாட்டினான். காசி அருள்மிகு விசுவநாதர் ஆலயத்தின் வழியாக பனாரஸ் பல்கலைக்கழகத்தில் கோயிலின் சார்பில் ஓர் இருக்கை (Chair) நிறுவப் பெற்றுள்ளது. அகத்தியர் நூல்களை இந்தியில் மொழிபெயர்க்க பனாரஸ் பல்கலைக்கழகமும், காசி விசுவநாதர் ஆலயமும் நாமும் இணைந்துச் செயலாற்றுவதற்கான வாய்ப்புக் கிடைத்துள்ளது.

மேலும் காசித் தமிழ்ச் சங்கமத்தை இவ்வாண்டு பொறுப்பேற்று நடத்துவது சென்னை

ஐஐடி என்ற இந்தியாவின் தலைசிறந்த தொழில்நுட்பப் பயிலகம் ஆகும். இந்நிறுவனத்தின் வழியாக செயற்கை நுண்ணறிவின் வழியாக அகத்தியரின் மருத்துவ நூல்களின் மருத்துவ முறைகளை வெளிப்படுத்தவும் முயற்சி செய்ய எண்ணியுள்ளோம்.

மேலும் சென்னையில் இயங்கிவரும் அகத்தியர் அறக்கட்டளை கடந்த சில ஆண்டுகளுக்கு முன்பாக அகத்தியர் நூல்களுக்கு உரைகாணும் பணியைச் செய்யவும் செயற்கை நுண்ணறிவு மூலம் ஒரு தரவுத்தளம் (Database) ஏற்படுத்த முயற்சி செய்து,அது முடிவடையாத நிலையில் உள்ளது. அந்த முயற்சியிலும் நாம் பங்கு பெற ஒப்புக்கொண்டிருக்கிறோம்.மேலும் அகத்தியர் மருத்துவத்தில் நோயைக் கண்டுபிடிக்க உதவும் நாடியை மின்னணுவியல் வாயிலாக துல்லியமாக அறிய Biomedical Engineering நிபுணர்களையும் அணுகி உள்ளோம். அதில் யாரேனும் உதவ முன்வந்தால் அவர்களையும் அகத்தியர் மருத்துவக் குழுவில் இணைத்துக் கொள்ள விரும்புகிறோம்.

மேலும் இச்சங்கமத்தோடு பல சிறப்பான அனுபவங்களும் நமக்குக் காசியில் கிடைத்தன. இம்முறையும் காசி விசுவநாருக்கு ருத்ராபிஷேகம் செய்து இறையருள் பெற்றோம்.

காசி அருள்மிகு விசுவநாதர் திருக்கோயிலுக்கு வருகை தந்த அயல்நாட்டுப் பயணிகள் ஐம்பத்து ஐந்து பேருடன் நாம் கலந்துரையாடும் வாய்ப்பு கிடைத்தது. இதற்குக் காசி விசுவநாதர் ஆலய தலைமை செயல் அதிகாரி ஏற்பாடு செய்திருந்தார்.. இவ்வகையில் நம்மையும் ஒரு பொருளாக்கி நன்மை பல நடத்துவிக்கும் எம்பிரானின் பரம்பொருளை எண்ணி எண்ணி நாம் துதிக்கிறோம்.

அனைவருக்கும் தைப்பூச, மகாசிவராத்தி, மாசி மக வாழ்த்துகள்.

# சுவாமிகள் கலந்து கொண்ட நிகழ்வுகள்



திருப்பதியில் நடைபெற்ற சர்வதேச கோயில்கள் மாநாட்டில் நமது சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகள் உரையாற்றிய புகைப்படங்கள் மற்றும் வீடியோப் பதிவு



**சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகள், காசி விஸ்வநாதர் கோவிலுக்கு வருகை புரிந்த 55 வெளிநாட்டுப் பிரதிநிதிகளுடன் கலந்துரையாடிய புகைப்படங்கள் மற்றும் வீடியோப் பதிவு**







## கோவிலூரின் கதை - 14

# திருவண்ணாமலை ஈசானிய ஞான தேசிக சுவாமிகள் வரலாறு



- முனைவர் மு.பழனியப்பன்
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருவாடானை

திருவண்ணாமலையில் ஈசானிய மடத்தில் வீற்றிருந்து ஞானபெருங்கருணையைச் செய்துவரும் சீர் வளர் சீர் ஈசானிய ஞான தேசிகரின் அருமை பெருமைகள் அளவில் அடங்காதனவாகும். இவர் ஞான நிட்டையில் இருக்கும் காலத்தில் அண்ணாமலையாரும் உண்ணாமுலையம்மனும் புலிகளின் வடிவில் எழுந்தருளி இவருக்குக் காவலாக இருந்த பெருமை யாருக்கும் வாய்க்காத பெருமையாகும்.

வேலூரில் வாழ்ந்து வந்தவர் திருநீலகண்டர். இவரின் மனைவி உமைய பார்வதி. இருவரின் இல்லறத்தில் மகப்பேறு இன்மை என்ற ஒரு குறையைத் தவிர வேறு குறை இல்லை. மகப்பேறு வேண்டி இவர்கள் திருவண்ணாமலையில் உள்ள முருகப் பெருமானை வேண்டி வணங்கி வந்தனர். இவர்களின் குறையைப் போக்க முருகப்பெருமான் கருணைக் கடைக்காட்டி மகப்பேறு உருவாகும் நிலையைக் கொண்டுவந்தார். மிக

மகிழ்ந்த இருவரும் பிறக்கும் குழந்தைக்குக் கந்தப்பன் என்று பெயர் சூட்டி மகிழ மனம் வைத்தனர்.

இவர்களுக்கு ஆண்மகவு பிறந்தது. அக்குழந்தைக்குக் கந்தப்பன் என்ற பெயர் சூட்டி மகிழ்ந்தனர். இளம் வயது முதலே அமைதியும், அன்பும், ஞானமும் உடைய குழந்தையாக அக்குழந்தை வளர்ந்து. பள்ளிப் பருவத்தில் பல அருட்செயல்களை அக்குழந்தை செய்தது, இது பலருக்கும் ஆச்சரியத்தை அளித்தது.

## குருநிலை

பள்ளியில் சொல்லித் தரப்படும் பாடங்களை உடனுக்கு உடன் மனனம் செய்து ஒப்புவிக்கும் ஆற்றல் இக்குழந்தைக்கு மிகச் சிறப்பாக அமைந்திருந்து. பாடங்களை ஆசிரியரிடம் சொல்லி முடித்தபின் அமைதியில் கலந்து விடும் அற்புதத்தையும் அக்குழந்தை செய்து வந்தது. இச்சிறுவயதில் ஞானத் தொடர்பு அக்குழந்தைக்கு ஏற்பட்டுச் சில நாள்கள் தன்னை மறந்து, உலகை மறந்து நிற்கும் நிலை இருந்தது.இது அக்குழந்தையின் ஞானம் தேடிய வாழ்வின் தொடக்கமாக அமைந்தது. இவரின் குடும்பத்தார் இவரை குருத்தன்மை பெற்ற குழந்தை என்பதை உணர்ந்து அவரைக் குருவாகவேக் கொண்டாடினர். இவரும் நாளும் சிவபூஜை செய்து தியானத்தில் ஆழ்ந்து வாழ்ந்து வந்தார்.

## தல யாத்திரை

இவரின் குடும்பத்தார் இவருக்குத் திருமணம் செய்விக்க முயற்சித்த நேரத்தில் தான் சிவபெருமானுக்குப் பரம அடியவனாகி, அப்பெருமான் கோயில் கொண்டுள்ள இடங்களைத் தரிசித்து வருகிறேன் என்று தலயாத்திரை செய்ய ஆரம்பித்தார். ஊர்தோறும் சென்று சிவபிரானின் பேரருள் பெற பயணித்தார். சிதம்பரம் நகரடைந்து நடராச மூர்த்தியை வணங்கித் திருவிளக்குக் கட்டளை ஒன்றை அவர் ஏற்படுத்தினார்.

## மௌன குருவை அடைதல்

சிதம்பரத்தில் இருந்த மௌனகுருவிடம் இவருக்கு ஈர்ப்பு ஏற்பட்டது. நாளும் நடராசரோடு அவரையும் தரிசித்து வந்தார். காலை, மாலை வேளைகளில் அவரின் அருட் கருணைக்கு ஏங்கினார். அவரிடம் உபதேசம் பெற விரும்பினார். குளிர் மழை நாளில் கௌபீனம் மட்டுமே அணிந்து அவர் முன்னர் ஞானம் வேண்டி நின்றார். இவரின் ஞானவேட்கையை

அறிந்த மௌனகுரு இவருக்கு போர்த்திக்கொள்ள கம்பளம் கொடுத்து ஞான உபதேசமும் செய்துவித்தார். மௌன குருவின் மீது பஞ்ச ரத்தினப் பாடல்கள் பாடினார். மௌனகுருவிடம் ஞானிகளுக்கு அடையாளங்களான ஞானத் தண்டம், ஞானப் பட்டி சடாமகுடம் தரித்து மௌன சுவாமிகளின் அருட்பார்வையில் ஞானித் திருக்கோலம் ஏற்றார்.

### தொடர் பயணம்

இதன் பின் கந்தப்ப சுவாமிகள் திருவாரூர் சென்று தியாகேசரை வணங்கி, மடப்புரம் வந்து தட்சிணாமூர்த்தி சுவாமிகளைக் கண்டு ஞானம் பெருக்கினார். சிக்கல் அருகில் இருந்து பொருள்வைத்த சேரியில் வீற்றிருந்த சீர் வளர் சீர் உகந்த லிங்க சுவாமிகளையும் தரிசித்து சிலகாலம் அவருடன் இருந்து அருள் பெருக்கினார். தொடர்ந்து பயணித்த இவரின் பயணம் வேட்டவலம் என்ற ஊருக்கு அருகில் உள்ள பாக்கம் என்ற ஊரில் உள்ள மலையடுக்கில் பலகாலம் ஞான சமாதி நிலையில் நிட்டையில் இருந்தார்.

### மண்ணில் பொன்

பாக்கத்து மலையில் பல நாளும் பால் தந்து தன்னைக் காத்த முத்துசாமி உடையாருக்குச் செல்வம் பெருக்கக் காரணமாகச் சித்து இயற்றினார். அவர் வீட்டில் கிடைத்த புதையல் அவருக்குப் பெருஞ்செல்வம் தந்தது. இதனை இவரது பெருமையாகக் கருதி மக்கள் இவரிடம் செல்வம் கேட்டு முறையிட்டனர். இவர்களின் அன்புத் தொல்லைகளால் அவ்விடம் விட்டு அகல கந்தப்பர் முன் வந்தார். திருவண்ணாமலைக்கு வருகை தந்து, அருள்மிகு அண்ணாமலை, உண்ணாமுலை அம்மனைத் தரிசித்து அங்கேயே இருப்பது என முடிவெடுத்தார். திருவண்ணாமலையின் கோரக்க நாதர் குளக்குரை இவரின் இருப்பிடமானது.

### பிள்ளைக் கனி

இக்காலத்தில் இவரிடம் தொண்டு புரிய அருணாசலம் செட்டியார் என்பவர் வந்தார். அவருக்குக் குழந்தைப் பேறு இல்லாத குறை போக்கத் தமக்கு சித்தர்கள் அருளால் கிடைத்த ஞானக் கனி ஒன்றைக் கொடுத்து அருளினார். சித்தர்களின் கூட்டுறவால் மனித வாசனையற்ற அருட்குகைகளில் இவர் சில காலம் தங்கும் பேறு கிடைத்தது. இவருக்கு மேலும் சித்து விளையாட்டுத் திறன்கள்



கிடைத்தன. அருணாசலம் செட்டியார் குழந்தைப் பேறு பெற்றார். அவருக்குக் கந்தப்பர் வழங்கிய திருநீற்றுப் பை இன்னமும் அருணாசல செட்டியார் குடும்பத்தாரால் வைத்து வணங்கப்பெற்று வருகிறது.

### பாக்கத்து முத்துச்சாமி பக்கத்தில் வருதல்

பாக்கம் என்ற ஊரில் இருந்து அண்ணாமலைக்குக் கந்தப்பர் வந்த செய்தியை கடவுள் தந்த குறிப்பின் வழி அறிந்த முத்துச்சாமி உடையார் அண்ணாமலைக்குக் கந்தப்பரைத் தரிசிக்க ஈசானியமூலைக்கு வந்தார். கந்தப்பரையும் அண்ணாமலையார் ஈசானியத்திற்கு எழுந்தருளக் குறிப்பளித்தார். கந்தப்பர் அவ்வாறே ஈசானியத்தில் இருப்பதானார்.

### வரிப்புலி காவல்

ஈசானியத்தில் இருந்த கந்தப்பருக்குக் காவலாக அவ்வப்போது அவரின் அருகில் வரிப்புலிகள் வந்து அமர்ந்து அவருக்கு அரணாக விளங்கும். அவற்றை தன் நிட்டை கலைந்த காலத்தில் அன்பொழுக தடவிக் கொடுத்து மகிழ்வார் கந்தப்பர். தொண்டர்கள் வருங்காலத்தில் வரிப்புலிகளை அவைகளின் இருப்பிடத்திற்குத் திரும்ப அன்புக் கட்டளையிட அவைகளும் அடிபணியும். (திருவண்ணாமலை ஈசானிய மடத்தில் உள்ள பாதாளக் குகையில் இக்காலத்திலும் கந்தப்பர் இருந்த அந்தக் குகைத்தளத்தைப் பார்வையிட இயலும்.)

### இன்னும் விளையாடல்

புதுப்பாளையத்தைச் சார்ந்த ஒருவர் சூலை நோயால் அவதிப்பட்டுக் கொண்டு இருந்தார். அவர் திருவண்ணாமலையைக் கிரிவலம் செய்து வரும்பொழுது கந்தப்பரைக் கண்டு வேண்டினார்.



அவரைத் தன் திருக்கண் நோக்கிப் பார்க்க அவரின் நோய் தீர்ந்தது. அது முதல் அவர் இவருக்கு அடிமையாகி அவரும் ஈசானிய சுவாமி என்று அவர் ஊராரால் அறிவிக்கப்பெற்று அவருக்கு மடம் முதலியன எழுப்பப்பட்டன.

மற்றொருநாள் கந்தப்பர் தவம் இருக்கும் இடத்திற்கு ஆவேசமாய் வந்த கரடி ஒன்று அருகிருந்த பிள்ளையார் சிலை தாக்க அக்கரடி வீடுபேறு அடைந்தது. கரடி மோட்சம் பெற்ற நிலை இதுவாகும். அவ்வாறு வந்த பிள்ளையார் சிலைக்குக் கரடி விநாயகர் என்ற நாமம் ஏற்பட்டு அவர் வழிபடப்பட்டுவருகிறார்.

### ஈசானிய ஞான தேசிகர் ஆதல்

பாக்கத்து முத்துச்சாமி திருண்ணாமலையில் ஈசானியத் திசையில் இருந்த தமக்குச் சொந்தமான நந்தவன இடத்தைக் கந்தப்பர் இருக்கைக்கு வழங்கினார். இதுமுதல் ஈசானிய ஞான தேசிகர் என்றே அனைவராலும் கந்தப்பரால் அழைக்கப்பட்டார்.

### பொருள் வேண்டா தவவேள்வி

திருவண்ணாமலையில் வாழ்ந்த அருணாசல சுவாமி என்பவர் தம் புதுச்சேரி சொத்துகளைப் பொன்னாக்கிக் கொண்டு வந்து ஈசானிய தேசிகரிடம் வைப்பதென முடிவெடுத்தார். ஈசானிய தேசிகரோ பணமும் வராது, நீயும் வரமாட்டாய் அதனால் போகாதே என்றார். மீறியும் அவர் சென்று மாடுகளால் குத்துண்டு மறித்துப் போனார். அவரின் பொன்னும் பணமும் புதுச்சேரிக்குள்ளேயே முடங்கியது.

ஐடன் துரையும் அன்பும் , ஆறு கடந்த குதிரையும்.

திருவண்ணாமலையில் ஐரோப்பியர் ஐடன் என்பவர் மாவட்ட ஆட்சியராக இருந்தார். அவர் ஈசானிய ஞான தேசிகரைக் காண வந்தார். அப்போது அண்ணாமலை வரிப்புலியாரை விலகச் செய்து

ஐரோப்பியருக்குக் காட்சி நல்கினார் ஈசானியர். அவரைப் பிணித்திருந்த காசநோயை நீங்கும்படி அமிழ்து அளித்தார். துரை பல சன்மானங்கள் நிலங்கள் தருவதாய்ச் சொன்னபோதும் அவற்றை மறுத்து அருள் செய்தார் ஈசானிய ஞான தேசிகர். அதுமுதல் அந்த ஐரோப்பியல் எச்செயல் செய்தாலும் ‘‘தாத்தாவே நீ இக்காரியத்திற்கு முன் இருந் து செய் ’’ என்று ஈசானியரை வணங்கிச் செய்யத் தொடங்குவார். செயல்கள் வெற்றி பெறும்.

திருவண்ணாமலைத் தேர் வடம் பிடிக்க இத்துரை வரும்போது ஈசானியரை மனதால் வேண்டி வாக்கால் வேண்டி அதன் பின்னே காரியம் தொடங்குவார். ஓராண்டு துரை வர இயலாத நிலையில் ஆற்று வெள்ளம் பெருகியது. எல்லோரும் நிற்கையில் துரை மட்டும் தாத்தாவின் பெயரைக் குதிரையின் காதில் சொல்லிட அது வேகம் கொண்டு ஆற்றில் பாய்ந்து தேர் வடம் பிடிக்க வந்து சேர்ந்தது. அதே நேரம் நிட்டையில் இருந்த ஈசானிய தேசிகரின் கரங்கள் நீண்டு இடப்பக்கம் தாழ்ந்தது. இதற்கான காரணத்தை அருகில் இருப்பவர் அறிய விரும்ப ஈசானிய தேசிகர் ‘‘ எவன் ஆற்றில் விழுந்தாலும் அதற்கு நாம் உத்திரவாதியாக வேண்டுமோ?’ என்று பதில் உரைத்தார். ஜடன் துரையின் குதிரைக்குச் சித்து அளித்தவர் ஈசானியர்.

## சீர்வளர் சீர் முத்திராமலிங்க ஞான தேசிகர் சந்திப்பு

அருணாசலம் வந்த சீர் வளர் சீர் முத்திராமலிங்க ஞான தேசிகர் ஈசானிய ஞான தேசிகரைச் சந்தித்து அவருடன் சிலகாலம் தங்கினார். இருவரும் ஞானம் பெருக்கினர். அப்போது அருகில் இருந்த முத்துச்சாமி கோவிலூர் சாமிகளின் கைவிரலில் இருந்த மோதிர அழகினை மோகிக்க அதுவறிந்த கோவிலூர் முத்திராமலிங்கர் அதனை அவருக்கு அளித்து மகிழ்ந்தார். மோதிரம் பெற்ற தொண்டர் திருக்கதை இங்கும் தொடர்கிறது.

## மண்டகுளத்தூரும் வேதப் பெருக்கும்

மண்டக் குளத்தூரைச் சார்ந்த சபாபதி என்பார் காஞ் சிபுரத்தில் கண்ட கனவின்வழி திருவண்ணாமலை ஈசானிய தேசிகரைத் தன் ஞானகுருவாகக் கொள்ள வருகை புரிந்தார். அவர்

வடமொழி வல்லமை பெற்றவர். அவருக்கு நிட்டை கை கூடி வராது காலம் தாழ்த்தியது. இதற்கான காரணத்தை ஈசானிய ஞான தேசிகரிடம் கேட்க அவர் வடமொழி வேதங்களை மற்றவர்களுக்கு விளங்கச் சொல்லவும். அவை உன் புத்தியில் அடைந்து கிடக்கிறது என்றார் ஈசானியர். அவரும் தன்னூர் சென்று அங்கிருந்த வேதியச் சிறுவர்க்கு வேதஞானம் புகட்டி நிட்டை கைவரப்பெற்றார்.

இதன்பின் அவர் கிணற்றில் விழுந்த நண்பரின் உயிரைக் காத்து, நீரில் விளக்கெரித்து போன்ற பல சித்துகள் செய்தார். தவ நிறைவு எய்திய அவருக்கு அங்கு மடமும் நாள்பூசையும் நடந்து வருகிறது.

### உகந்த லிங்கரின் நிறைவும் ஈசானியரின் நினைவும்

சீர் வளர் சீர் உகந்த ஞான லிங்க தேசிகர் தன் நிறைவின் நிலை அறிந்து அதற்காகக் காத்திருந்தார். சரியான நேரத்தில் ஈசானியர் அவர் இருக்கை சென்று அவரின் மனம் நிறைந்தார். இறை கலந்தார். அவரின் திருமேனியை அடக்கம் செய்யச் சென்ற நிலையில் ஊரார் தடை செய்ய அவர்களை தன் ஆணையால் விலக்கி நலமுடன் அடக்கம் செய்தார்.



### தனது பரிபூரணம் உணரல்

ஈசானிய ஞான தேசிகர் சொல்வாக்கு மிக்கவர். சொல் பலிதம் கொண்டவர், சிவ காடட்சம் மிக்கவர். அவர் சிறந்த ஆன்மீகக் கவிஞர். திருவண்ணாமலையார் அவருக்கு கோரக்க நாதர் குளக்கரையில் தரிசனம் கொடுத்த காலத்தில் அவ்வனுபவத்தை அண்ணாமலையார் தோத்திரப் பாமாலையாகப் பாடி அருளினார். மேலும் வெண்பா, அந்தாதி கண்ணி வடிவங்களிலும் பெருமான் பெருமையை அவர் பாடியுள்ளார்.

தொண்டர்கள் புடை சூழ எந்நாளும் வீற்றிருந்து ஞான கடாட்சத்தை அவர் அருளி வந்தார்.ஈசானிய ஞான தேசிகர் தமது ஞான திருஷ்டியால் தன் நிறைவுக் காலம் நெருங்குவதை உணர்ந்தார். ஓலையில் 1829 ஆம்



ஆண்டு. மார்கழி மாதம் 26 ஆம் நாள் குருவாரம் , மிருகசீரிட நட்சத்திரத்தில் தன் நிறைவு என்பதை அவர் எழுதி வைத்தார். ஆயிரங்கால் மண்டபத்தில் அறைக்கட்டுக்கு ஸ்ரீநடராச பெருமான் போகின்றார். நாமும் அங்குப் போக வேண்டுமென்று அவர் திருவாக்கு அருளினார்.

அவரின் வாக்குப்படியே அவரின் முக்தி நிலை அமைந்தது. அவரின் ஜீவ சமாதியை அவர் வில்வக் கண்ணாடியில் அண்ணாமலையாரைக் கண்ட இடத்தில் அமைத்தனர். வேட்டவலம் ஜமீன்தார் குடும்பத்தார் ஜீவ சமாதியின் மீது திருக்கோயில் எழுப்பினர். சிவலிங்கப் பிரதிட்டை செய்தனர்.

தற்போது மாதம் தோறும் மிருக சீரிட நட்சத்திரத்தில் மாத குருபூசையும் மார்கழியில் வருட குருபூசையும் சிறப்புடன் நடைபெறுகிறது. மாத குருபூசைகளில் இந்தியாவின் பல மாநில அன்பர்கள் கலந்து கொண்டு அன்னதானம் செய்கின்றனர். வாருங்கள் ஈசானியம் செல்வோம்.

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

## பகுதி-16

## திருவடி தொழுத படலம்
(52 பாடல்கள்)



முனைவர் சரசுவதி இராமநாதன்,
பள்ளத்தூர்

### முடிசூட்டுவிழா (பட்டாபிஷேகம்)

"சீதை இருக்குமிடம் தெரிந்தாயிற்று. இனி ஏன் தாமதம் உடனே படை எழுக" எனச் சுக்கிரீவன் ஆணையிட வானரப்படைகள் புறப்பட்டன. (திருவடி தொழுத படலம் நிறைவு). மீதிக்கதையைச் சுருக்கமாகச் சொல்லிப் பட்டாபிஷேகத்துடன் தான் சுந்தரகாண்ட பாராயணத்தை நிறைவு செய்வோம். அந்த மரபில் நிறைவாக 16 என்னும் எண்ணில் முடிசூட்டுவிழாப் பகுதி வருகிறது. சீதாராமன், பட்டாபிராமன், ஜெயராமன், விஜயராகவன் அனைவருக்கும் பதினாறு பேறுகளும் தந்து சுகானந்த வாழ்வளிப்பார்! வாழ்க வளமுடன்!

1. தென்திசை சேர்ந்து கடற்கரைக்கு வந்தனர்.

2. வருணனைப்பணிய வைத்து சேது பந்தனம் செய்து அணை கட்டினர். மலையால் அணைகட்டி மறு கரை ஏறி" என்றார் ஆழ்வார்.

3. வீடணன் அடைக்கலமானான். குகனொடும் ஐவர் ஆகிக் குன்று சூழ்வான் மகனொடும் அறுவர் ஆன தசரத மைந்தர். அரக்கர் கோன் தம்பி வீடணனுடன் சேர்ந்து எழுவர் ஆன அற்புதம் நடந்தது!

4. அங்கதன் தூது அனுப்பப் பெற்றான். பயனில்லை.

5. முதல்நாள் போரில் எல்லாம் இழந்து நின்ற இராவணனை

இன்று போய் போர்க்கு நாளை வா என உயிர்ப்பிச்சை நல்கினான் ஸ்ரீ ராமன். இராவணன் மனம் திருந்தி வந்தால் கோசல நாட்டைத் தரவும் தயாராக இருந்த வள்ளல் இராகவன்!

6. கும்பகர்ணன் போருக்கு வந்து, உயிர் கொடுத்துப் புகழ் கொண்டான்.

7. அதிகாயன் வதைப்பட்டான்.

8. பல படை வீரர் அழிந்துபட, இந்திரசித்தன் மாயப்போர் பல புரிந்தான். நாகபாசம் போட்டான். கருடாழ்வார் வந்து காப்பாற்றி விட்டான். மேகநாதன் பிரம்மாத்திரம் ஏவினான்! அனைவரும் மயங்கிக் கிடக்க, அனுமன் (தேவியின் வரத்தால் சிரஞ்சீவித்துவம் பெற்றவன் அல்லவா!) சஞ்சீவி மலையைக் கொண்டு வந்து அனைவர் உயிரையும் காத்தான் இராமர் நன்றிப் பெருக்குடன்

'தசரதன் பிள்ளைகள் இறந்துவிட்டோம்!

அனுமனே உன் பிள்ளைகளாக உயிர் பெற்றோம்! என வாழ்த்தினார்.

9. இலக்குவன் இந்திரசித்தனை வதைத்தான். தசமுகனின் பத்துவாயும் புலம்பித் தீர்த்தன. புத்திர சோகம், காமத்தை



மாற்றியது.

10. இறுதிநாளில் கூடச் சிவபூசை செய்து, தானம் வழங்கிப் போருக்கு வந்த இராவணனை அயன்படையால் கொன்று ஸ்ரீ ராமன் அவதார நோக்கத்தை முடிக்கிறான் இராவணன் முகங்கள் மும்மடங்கு பொலிந்தன என்றான் கம்பர்.

- காமம் நீங்கி – வீரனாகப் போரிட்டு மடிந்தான்
- சுத்தவீரன் கையில் மடிந்த பெருமிதம்
- கடைசிவரை தாழாத மானத்துடன் போரிட்டான்.

மண்டோதரி புலம்பிய அற்புதமான பாடல் (“ வெள்ளெருக்கஞ்சடை முடியான்”) சீதை இராவணன் நெஞ்சில் இல்லை என நிரூபிக்கிறது. ஒரு கற்பரசி மற்றொரு கற்பரசிக்குத் தந்த விடுதலை இது. 'கள்ளிருக்கும் மலர்க்கடந்தல்

சானகியை மனச்சிறையில் தந்த காதல் – உள்ளிருக்கும்? (எனக் கருதி உடல் புகுந்து தடவியதோ ஒருவன் வாளி? (இல்லை என்றறிந்து அம்பு வெளியே வந்தது!)

11. வீடணனைக் கொண்டு அரக்கர் குடும்பத்திற்கு இறுதிக்கடன் செய்ய வைத்தார் கருணை வள்ளல்.



12. சீதையின் தூய்மை அக்னிப் பிரவேசத்தால் உலகுக்கு நிரூபிக்கப்பட்டது. அக்னிக்கே அக்னிப்பரிட்சையானது.

13. வீடணன் விமானம் கொண்டு தர அனைவரும் புறப்பட்டனர். பரத்துவாக முனிவரின் வாழ்த்துப் பெற்றனர்.

14. நந்தி கிராமத்தில் தவமிருக்கும் பாகனைத் தீயில் விழுந்து விடாமல் காக்க அனுமன் முதலில் அனுப்பினார் இராமன். பதினான்கு ஆண்டுகள் முடிந்ததும் இராமா! நீ வந்து அரசை ஏற்றுக்கொள்ளாவிடில், தீயில் விழுந்து உயிர் துறப்பேன்!" எனச் சத்தியம் செய்திருந்தானே பரதன். ஆக அனுமன் வந்து கணையாழி காட்டிப் பரதன் உயிரையும் காத்தான் பிரிந்தவர் 14 ஆண்டுகளின் பின் மீண்டும் கூடி மகிழ்ந்தனர். வசிட்டனே இப்போதும் முடிசூட்டு விழாவுக்கு நாள் குறித்தான். முன்பு குறித்தது இராவண வதத்திற்குப் புறப்பட அது தேவரகசியம்.

15. தசரதன் வானிலிருந்து வாழ்த்தினார். அவர் மனைவி யில்லை எனத் துறந்த கைகே யியை, மகனல்லன் எனத் துறந்த பாகனை ஏற்றுக்கொண்டு, தனக்குத் தாயும், தம்பியுமாக உறவு தர வரம் கேட்டுப்பெற்ற இராமன் புகழ் சொல்லும் தரமா?

16. அயோத்தி மீண்டும் அலங்கரிக்கப் பெற்றது. இராமன் வந்துவிட்டான். முடிசூட்டு விழா



காத்த நீ – என்னை விட உயர்ந்தவன். என் தந்தை நிலையில் என்னைத் தழுவிக் கொள்!” என்றான். வடநாட்டில் ராம ஆஞ்சனேய ஆலிங்கலப் படங்கள் அதிகம். நன்றி மறவாதவன் ஸ்ரீ ராமன். கம்பனும் நன்றி மிக்கவர்.

19.”அரியணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன் வெண் குடை கவிக்க
இருவர்கள் கவரி வீச

ஏற்பாடுகள் பிரம்மாண்டம். எல்லாரது உயிரையும் காத்த அனுமனே ஏழுகடல் தீர்த்தமும் கொண்டு வந்து தந்தான்.

17. அனைவருக்கும் பரிசுகள், நன்றியுரைகள் வழங்கப் பெற்றன!

18. அனுமனிடம் பக்கத்தில் வந்து இராகவன் “ நீ உதவிய அளவு ஓர் உதவி செய்தார்? எத்தனை உயிர்களைக் காத்தாய்! சீதையை என்னை இலக்குவனை, பரதனை வானர்களை எல்லாம்

விரைசெறி குழலி ஓங்க
வெண்ணெய் மன்
சடையன் தங்கள்
மரபுளோன் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மவுலி”

எட்டு பேர் இந்த முடிசூட்டுப் பாடலில் வந்தனர். அதில் சடையப்ப வள்ளல் பெயர் இருக்க விழைந்தான் கம்பன். யாருக்கு முடிசூட்டு. இராமன் என்று சொல்ல வில்லையே! ஆம்! ஒவ்வொரு

உயிரிலும் ஸ்ரீ ராமன் இருக்கிறான்! இராமாயண காலம் எந்த யுகம்? கம்பன் சடையப்பர் வாழ்ந்தது கலியுகம்! ஆகவே சடையன் குலத்தைச் சேர்ந்த முன்னோன் கிரீடத்தை எடுத்துத் தர, வசிட்டன் வாங்கிச் சூட்டினான் என்றார். இன்று கம்பன் மீண்டு வந்தால், கம்பன் அடிப்பொடி குலத்து முன்னோன் அக்கிரீடத்தைத் துடைத்துத் தந்தான் எனவும் பாடி யிருக்கக்கூடும்.

ஏழுலகும் தனிக்கோல் செலுத்தி, ஆண்ட இராமனின் ஆட்சியில் நாடு செழித்தது. நல்லோர் வாழ்ந்தனர் அறம் தழைத்தது.

இராமராஜ்யம் வாழ்க!
பாரத சமுதாயம் வாழ்க!
வாழ்க சீர் அடியார் எல்லாம்!

கோவிலூர் சாமியின் அருளாணை என்னைத் திருநெல்லை இதழில் 16 கட்டுரைகள் தர வைத்தது. தம்பி மு.பழனியப்பனார், அச்சிட்ட சகோதரர்கள் பிழையில்லாது சரி பார்த்த பேராசிரியர்கள், திருநெல்லை வழி சுந்தரகாண்டம் படித்த வாசகர் அனைவரும் "வாழ்க வளமுடன்"

"இராமஜெயம் ஸ்ரீ இராமஜெயம்
நம்பின பேருக்கு ஏதுபயம்!
இராமஜெயம் ஸ்ரீ ராமஜெயம்
இராமனின் கைகளில் நான்
அபயம்"

(கவியரசர்)

முத்தமிழ் அரசி சரசுவதி இராமநாதன் அவர்களின் கைவண்ணத்தில் வரையப் பெற்ற சுந்தரகாண்டப் பகுதி நிறைவு பெறுகிறது.

மங்களம்.



தொடர்ந்து முனைவர் சரஸ்வதி ராமநாதன் அவர்கள் நமது திருநெல்லை இதழில் சிலப்பதிகாரம் பகுதியை எழுத உள்ளார்

# ஞானசம்பந்தர் என்ற தாய் வாழை






**டாக்டர் ஜெயபாலன் வள்ளியப்பன்,**
**ஈப்போ, மலேசியா**

## வாழையடி வாழை

அருளாளர்களின் திருக்கூட்ட மரபைப் பற்றிச் சொல்லும்பொழுது வாழையடி வாழையென வந்த திருக்கூட்டம் என்பார்கள். வடலூர் இராமலிங்க வள்ளல் பெருமானும் "வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ" என்றே தன்னை இந்த உலகுக்கு அறிமுகம் செய்துகொள்கின்றார். ஏன் அருளாளர் பரம்பரையைக் குறிக்க வாழையைக் குறிப்பிடுகின்றோம்? இதற்குக் காரணம் மா, பலா, அரசு போன்றவை விதைகளின் மூலம் வளரும் விருட்சங்கள். பறவைகள் மற்ற உயிரினங்கள் தின்ற எச்சில் பழங்களின் விதைகளில் விளைந்த இவற்றை அருளாளர்களின் ஞான பரம்பரையைக் குறிப்பதற்குப் பயன்படுத்துவது ஏற்புடையதல்ல.

வாழை மட்டுமே விதை யின்றி விளையக்கூடியது. ஒரு தாய்வாழையின் அடிவேரில் கன்று



வாழை முளைக்கின்றது. ஆகவே, வித்தின்றி வளரும் ஞானபரம்பரையை ”வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபு” என்றழைப்பதே வழக்கம். அதுவே பொருத்தமாகவும் இருக்கும். இப்படி, மாணிக்கவாசகர் என்ற தாய் வாழையிலிருந்து, உதித்த அடிவாழையே இராமலிங்க வள்ளலார். அதேப்போல் திருஞானசம்பந்தர் என்ற தாய்வாழையிலிருந்து உதித்த அடிவாழைதான் அருணகிரிநாதர்.

அருணகிரிநாதரின் குரு முருகப்பெருமான். ”யாமோதிய கல்வியும் மெய்யறிவும் தாமே பெற வேலவர் தந்ததை” அனுபூதியில் பதிவு செய்கிறார் அருணகிரிநாதர். ஆனால், அவருக்கு வாழ்ந்து காட்டி, வழிகாட்டியது திருஞானசம்பந்தர்.

”புமியதனில் பிரபுவான புகலியில் வித்தகர்போல அமிர்தகவித் தொடைபாட அடிமையெனக்கு அருள்வாயே” என்று முருகனிடம் வேண்டியவர் அருணகிரிநாதர். அவர் வேண்டியதை முருகன் அருளினான்.

ஞானசம்பந்தரே திருப்புகலி வித்தகர். அந்த திருப்புகலி வித்தகரைப் போல பதினாறா யிரம் பாடல்களைப் பாடினார் அருணகிரிநாதர். எண்ணிக்கையில் மட்டுமல்ல , ஞானசம்பந்தரைப் போல தமிழை முன்னிறுத்தி, சந்த நயம் கொஞ்சும், இசைமிகு திருப்புகழைச் செய்தார். ஞானசம்பந்தர் ஒவ்வொரு சிவாலயங்களையும் தேடித் தேடிச் சென்று பதிகம் பாடினார். அதைப்போல அருணகிரிநாதரும் காசி முதல் கதிர்காமம் வரையுள்ள முருகன் ஆலயங்கள் தோறும் சென்று அனைத்து திருத்தலங்களையும் திருப்புகழ் பாடல் பெற்ற தலங்களாகப் போற்றும் வகை செய்தார். ஞானசம்பந்தர் சமணர்களை வாதில் வென்று சைவம் தழைத்தோங்க வழி செய்தார். அவரின் வழித்தடத்தில் வந்த அருணகிரிநாதர் சிறுதெய்வ வழிபாட்டின் நெறி நின்ற சம்பந்தாண்டான் போன்றோரிடமிருந்து நமது சைவத்தைக் காத்தார். ஆகமொத்தத்தில், திருஞானசம்பந்தர் என்ற தாய்வாழையின் அடியில்

முளைத்த கன்றுவாழை அருணகிரி என்னும் அருளாளர். இது சைவத்தை வாழ வைக்க வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபு.

### காலமும் சூழலும்

திருஞானசம்பந்தரின் காலம் 7ஆம் நூற்றாண்டு. அருணகிரிநாதர் தோன்றிய காலம் 15ஆம் நூற்றாண்டு. அவர்களின் காலங்கள் வெவ்வேறாக இருந்தாலும் சைவத்திற்கு சவாலான சூழலே அவர்கள் வாழ்ந்த காலக்கட்டத்தில் இருந்தது. ஏழாம் நூற்றாண்டில் சமணரும், பௌத்த சமயத்தவரும் தத்தம் சமயத்தை தமிழகத்தில் பரப்ப முனைந்தார்கள். இதைப்போலவே அறுசமயச் சண்டைகளும் சிறு தெய்வ வழிபாடும், இஸ்லாமியர்களின் வருகையும் பதினைந்தாம் நூற்றாண்டை சைவ சமயத்துக்கு சவாலான காலக்கட்டமாக மாற்றின. இந்தக் காலக்கட்டத்தில்தான் இவ்விரு அருளாளர்களும் தோன்றினார்கள்.

### தமிழும் தாளமும்

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தனின் வழியில் தமிழை முன்னிருத்தி முருகனைப் பாடியவர் அருணகிரிநாதர். சீர்காழியில் உதித்த தமிழ் விரகன் மூலமாக சமய மறுமலர்ச்சியோடு, தமிழ் மறுமலர்ச்சியும் உதயமானது. தமிழில் அதுவரை உருவாகாத சந்தக் குழிப்பும், கருத்தாழமும், பண்ணமைதியும் பெற்ற பாடல்களை உருவாக்கினார்.

சந்தக்கவி சிந்தும் தமிழுக்குச் சொந்தக்காரர் திருஞானசம்பந்தப் பெருமான்.

”அங்கண்மதி கங்கைநதி வெங்கண்ணர

வங்களெழில் தங்குமிதழித்

துங்கமலர் தங்குசடை யங்கிநிகர்

எங்களிறை தங்குமிடமாம் !

வெங்கதிர் விளங்குலகம் எங்குமெதிர்

பொங்கெரி புலன்கள் களைவோர்

வெங்குருவி ளங்கியுமை பங்கர்சரணங்கள்

பணி வெங்குருவதே !

இது வெங்குரு என்ற சீர்காழியில் ஞானசம்பந்தர் பாடிய பதிகப்பாடல் . இப்படி சந்தம் கொஞ்சும் பதிகங்களின் முன்னோடியகத் திகழ்கின்றார். இவர் தமிழ்மொழியால் பல அற்புதங்களைச் செய்கின்றார். ஆளுடையபிள்ளையின் பதிகங்கள் இறந்தவர்களை உயிர்ப்பித்தது. ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கியது, பாண்டியனின் வெப்ப நோயைத் தணித்தது. இவர் பாடல்களால் தமிழுக்குத் தனிமரியாதை கிடைத்தது.

இதையே அருணகிரிநாதரும் பின்பற்றுகிறார்.



அருணகிரிநாதர்

”அருணதள பாத பத்மம் அதுநிதமுமே துதிக்க அரிய தமிழ் தானளித்த மயில்வீரா !” என்று முருகனைத் துகிப்பதற்காகவே தமிழை அவன் கொடுத்தான் என்று பெருமை செய்கின்றார்.

”கொன்றைச் சடையர்க்கு ஒன்றைத் தெரிய கொஞ்சித் தமிழில் பகர்வோனே” என்று தன் தந்தைக்கு பிரணவ உபதேசத்தை முருகன் தமிழில் பகர்ந்தான் என்று பதிவு செய்கின்றார்.

ஞானசம்பந்தரைப் போல பதினாயிரம் பாடல்களை எழுதிய அருணகிரிநாதரின் திருப்புகழில் நமக்குக் கிடைத்தவை 1320 பாடல்கள். இந்த 1320 பாடல்களில், 1000 விதமான தாளக் கட்டுகளை அமைத்து ஞானசம்பந்தர் என்ற அந்தத் தாய்வாழையைப் போல சந்தக் கவிதைகளை விதம்விதமாகத் தந்தவர் அருணகிரிநாதர். இதனால் இவர் ”தாளமுனி” என்ற பெயரையும் பெறுகின்றார்.

## ஆலயங்களின் மறுமலர்ச்சி

ஞானசம்பந்தரின் வழிபடு கடவுள் ஐம்முகச் சிவன். அருணகிரிநாதரின் வழிபடு கடவுள் அறுமுகச்சிவன். அறுசமயங்களைப் போற்றினாலும் ஒரு தெய்வ வழிபாட்டில் நின்று சைவத்தைப் பரப்பியவர் ஞானசம்பந்தரும் அவர் வழிவந்த அருணகிரிநாதரும்.

ஆலயங்கள் தோறும் சென்று, அங்கிருக்கும் இறைவனைப் பாடி, அந்த ஆலயங்களுக்கு முக்கியத்துவம் தந்தவர்கள் இந்த இரண்டு அருளாளர்களும் இவர்கள் பாடிய ஆலயங்கள் பாடல் பெற்ற தலங்களாயின.

## ஞானசம்பந்தரே முருகனின் அவதாரம்

தனக்கு வழிகாட்டிய ஞானசம்பந்தரை, முருகனாகவே நினைத்துத் துதிக்கின்றார். அருணகிரிநாதர். அன்பின் மிகுதியால் ஞானசம்பந்தரே முருகனின் அவதாரம் என்றே பல பாடல்களில் குறிப்பிடுகின்றார். சைவத்தில் இறைவனுக்கு



வோது

பண்டித ஞான நீறு தருவோனே

(பஞ்சவன் = பாண்டியனுடைய நீடு கூனும் = நெடு நாளாக இருந்த கூனும் ஒன்றிடு = வந்து சேர்ந்த தாபமோடு = சுரமும் பஞ்சு அற = பஞ்சாய்ப் பறந்தோடும்படி வாது கூறு = தர்க்க வாதங்களைப் பேசி சமண் மூகர் = சமண ஊமைகள்.)

இப்படி பல பாடல்களில் சமணர்கள் கழுவேறிய சம்பவத்தையும், பாண்டிய மன்னன் திருநீறணிந்ததையும் சொல்கிறார்.

கதிர்காம முருகனைப் பாடும்பொழுது திருஞானசம்பந்தராகவே அவனைப் போற்றுகின்றார்.

"அழுதுலகை வாழ்வித்த கவுணியர்தலாதுதித்த

அரிய கதிர்காமத்தில் உரிய அபிராமனே"

இவ்வாறு ஓரிரண்டு பாடல்களில் அல்ல, 1320 திருப்புகழில் 149 பாடல்களில் திருஞானசம்பந்தரை, முருகனாகவே போற்றுகின்றார். அவதாரம் இல்லையெனினும், அருணகிரிநாதரின் இக்கூற்றை பக்தியின் உச்சத்தின் விளைவாகவே கொள்ள வேண்டும்.

செந்தமிழ் நாளு மோதி உய்ந்திட ஞான மூறு

செங்கனி வாயி லோர் சொல ருள்வாயே

பஞ்சவ னீடு கூனு மொன்றிடு தாப மோடு

பஞ்சற வாது கூறு சமண்மூகர்

பண்பறு பீலி யோடு வெங்கழு வேற

இதற்குக் காரணம் அவருக்கு குருவாக வந்து மனமாகிய குகையில் நின்ற குகன் வேறு, ஞான வாழ்க்கையில் வழிகாட்டிய ஞானசம்பந்தன் வேறு என்று பிரித்துப் பார்க்க முடியவில்லை.

சைவத்தைக் காப்பதற்கு முருகனே ஞானசம்பந்தர் வடிவெடுத்துள்ளார் என்பது அருணகிரிநாதர் வாக்கு.

"புத்தர் அமணர்கள்

மிகக் கெடவே

தெற்கு நரபதி

திரு நீறிடவே

பொற்ப கவுணியர் பெருமான்

உருவாய் வருவோனே"

என்று கவுணியர் பெருமானை அருணகிரிப் பெருமான் போற்றிப் பணிகின்றார், புகலி வித்தகனின் புகழைப் பாடுகின்றார்.

ஞாலம் போற்றும் ஞானசம்பந்தன் எனும் தாய்வாழையின் அடியில் அருணகிரி என்னும் சேய்வாழை தமிழும், சைவமும் தழைக்கத் தானும் வளர்ந்தது. தனக்குப்பின் பல முருகனடியார்கள் என்ற சேய் வாழைகளுக்கும் அது தாயானது.

**ஆறுமுகத் தரசே போற்றி!**

**ஆளுடைய பிள்ளையே போற்றி!**

**அருணகிரி நாதனே போற்றி! போற்றி!**

# நல்வழி பாடல்கள்

**பாடல்27**

ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட் டொன்றாகும்

அன்றி அதுவரினும் வந்தெய்தும் ஒன்றை

நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்

எனையாளும் ஈசன் செயல்

**விளக்கம்**

ஒரு பொருளை வேண்டும் என்று நினைத்தால் அது கிடைக்காமல் வேறு கிடைக்கலாம், அல்லது அது தான் வந்து சேர வேண்டும் என்ற விதி இருந்தால் அது கூட கிடைக்கும், நினைக்காத ஒன்று நமக்கு கிடைத்தாலும் கிடைக்கலாம் எல்லாம் ஈசன் செயல். மனிதர்களின் விருப்பத்தில் ஒன்றும் நடக்காது, இறைவனின் விதிப்படி தான் அனைத்தும் நடக்கும்.

## சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்

பகுதி – 11

## நாவுக்கரசரின் எழுச்சி முழக்கம்

### கங்கை யாடிலென் காவிரி யாடிலென்!



**திருமதி மு. சுப்புலட்சுமி,**
வரலாற்றாய்வர்
ஆசிரியர்: www.glorioustamils.com,
www.attraithingal.com,
வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...
வலையொலியில் தமிழொலி

அன்பே பத்திமையென்று நாயன்மார் அனைவரும் வலியுறுத்தியபோதும், பத்திமையில் பகுத்தறிவு அப்பருக்கேயுரிய சிறப்பு. அதை மேலும் மேலும் ஆணித்தரமாக உணர்த்தியவை அவர்தம் பதிகங்கள். குலவேறுபாடும் கோத்திரச் சார்புகளும், மனிதருள் பிரிவினை ஏற்படுத்துவதும் எளியோரைத் தள்ளிவைப்பதுமான இழிசெயல்களென உலகிற்குரைத்த அச்சமில்லாப் பத்திமைக்குச் சொந்தக்காரர் நாவுக்கரசர் என்பதைச் சென்ற பதிவில் கண்டோம்.

சாத்திரம் பேசாதீர் என்று திட்டமாகச் சொன்னதும் குலமும் கோத்திரமும் கொண்டென் செய்வீர் என்று சினந்து கேள்வியெழுப்பியதும் நாவுக்கரசர் என்ற சமூகப் போராளியின் ஒரு சிறுமுகந்தான். அவர் பதிகங்கள் காட்டும் வியத்தகு பன்முகங்களில் இழையோடி நிற்பது எழுச்சி வித்துக்களே. இன்றும் பேசவும் எழுதவும் பலரும்



தயங்கும் மிகச்சீரிய முற்போக்குக் கருத்துகளைக் குறிப்பாக ஒரு பதிகம் முழுக்க முன்வைத்தார் அவர்.

அது ஐந்தாம் திருமுறையில் வகுக்கப்பட்ட ‘பாவமும் பழிபற்றற வேண்டுவீர்..’ எனத் தொடங்கும் பொதுப்பதிகம். இறைவனின் கழலடியை மகிழ்ந்து உள்நிறுத்த, காவலராம் சிவபெருமான் கலந்தருள் செய்வார் என்று மென்மையாகவே தொடங்குகிறது பதிகம். முதல் பாடலுக்கு மட்டுமே மென்மைப் பாங்கை வைத்தார் அப்பர். பதிகத்தின் மற்ற பாடல்கள் தீப்பொறி பறக்கும் எரிமலைக் குழம்பு.

முதல் பாடல் தவிர்த்த மற்ற ஒன்பது பாடல்களிலும் சிவனை மையப்பொருளாக மனத்திருத்திப் பற்றவேண்டிய நெறிகளைச் சொன்னார்.

அவை

• எங்கும் ஈசன் என்று சொல்லவேண்டும்

• இட்டமெல்லாம் விருப்பமெல்லாம் ஈசனுடையதே என நினைக்க வேண்டும்

• ஈசனை உள்கவேண்டும்

• மனம் பொருந்தி ஈசனென்றுருக வேண்டும்

• ஞானமயமானவன் இறைவன் என்றுணர வேண்டும்

• ஆ ட ல் வே ட த் தை த் தரித்தவனாகிய அம்பலக்கூத்தனைப் பாடவேண்டும்

• என்றும் ஈசனென்று தொழவேண்டும்

• அ ர ன் பா ல் அன்புகொள்ளவேண்டும்

• கழலணிந்த இறைவன் சேவடியைப் பற்றிநிற்றல் வேண்டும்.

பதிகத்தில் சொல்லப்படும் மேற்கூறிய பற்றுதல்நெறிகள், சமய வழிகாட்டிகள் வகுத்துத்தந்த கடினப் பாதையை மிகமிக எளிதாக்கிய பட்டியல். அதனுள் அப்பர் பதியவைக்கும் பகுத்தறிவுச் சாரமே காலத்தை விஞ்சிநிற்கும் உணர்வுமுழக்கம். பிணி தீர்க்கும் கசப்பு மருந்தில் தேன் கலந்தாற்போல,

முற்போக்குச் சிந்தனைகளைத் தமிழ்க் கலந்து தந்த தமிழ்த் தொண்டரும் அவரே.

நல்லவற்றையும் அல்லவற்றையும் பகுத்துணரும் பேராற்றலை மனிதர்குலம் பெற்றபோதும், அதனைக் கட்டிவைத்து பின்னுக்கிழுக்கும் காரணிகள் பலவுண்டு. அதில் முதன்மையானது, இறைவழிபாட்டில் சடங்குகள். இறைவனைக் காட்டிலும் வலிமையானவை இந்தச் சமயச் சடங்குகள் என்று நினைக்கத் தோன்றுமளவிற்கு அவை மாந்தரைப் பிணித்துவைக்கக் காணலாம்.

சடங்குகள்பால் மதிப்பையும் ஈர்ப்பையும் காட்டிலும் சடங்குகளைக் கடைப்பிடிக்காவிடில் ஏற்படும் பாதிப்புகளைச் சுட்டி அச்சமூட்டும் குழுவினரை, இறைவனைக் காட்டிலும் ஆற்றல் மிகுந்தோராகச் சமூகம் ஏற்றிவைப்பது இன்றும் தொடரும் அவலநிலை. அப்படிச் சொன்னோரையும் அவர்கள் விதித்த பத்திமைக் கட்டுப்பாடுகளையும் புறந்தள்ளச் சொன்ன புதுமைக்குச் சொந்தக்காரர் ஏழாம் நூற்றாண்டு நாவுக்கரசர்.

பத்திமைக் காலம் வலியுறுத்திய வேத வேள்வி சாத்திரச் சடங்குகளை, உள்ளன்புடன் அணுகிய மக்களை இறைவனிடமிருந்து தள்ளிவைத்த முறைகளெனவே அப்பர் பார்த்ததை அவர் பதிகவழி புரிந்துணர முடியும். எவற்றையெல்லாம் எதிர்த்துப் போராடினார் நாவுக்கரசர்? குறிப்பாக நாம் நோக்கும் இந்தப் பதிகத்தில் அப்பர் முன்வைக்கும் முற்போக்குக் கருத்துகள் என்னென்ன?

ஏழாம் நூற்றாண்டின் சமயச் சடங்குகளைச் சொல்லம்புகளால் எதிர்த்த அப்பரின் இப்பதிகம், அன்றைய சமூகம் சிக்குண்ட போக்கையும் இன்றும் பகுத்துணராச் சமூகத்துத் துன்பியலையும் ஒருசேரக் காட்டும் காலக்கண்ணாடி. அவர் கையிலேந்தியது சுற்றுச்சூழலைத் தூய்மைப்படுத்திய உழவாரக் கருவியல்ல; வேதச் சட்டங்கள் மற்றும் சமயச் சடங்குகளென்ற விலங்குகளை உடைத்தெறிய முயன்ற உளியென்றே சொல்லவேண்டும்.

இறைவனின் கழலடிகளை விரும்பி உள்ளன்புடன் நினைக்க, அன்பர் மனத்துடன் கலந்தருள் செய்வார் அவரென்று பதிகத்தைத் தொடங்கினாரில்லையா? அடுத்தடுத்த பாடல்களில், உயர்ந்தவையென்று பத்திமைச் சமூகம் போற்றிச் சொன்ன விதிகளை நோக்கிச் சரமாரியாக எதிர்க்கேள்விகளைத் தொடுத்தார்.

ஆன்மிகத்தில் ஆறுகளுக்குச் சிறப்பிடம் உண்டு. பாவங்களைப்

போக்கும் வழிகளுள் ஒன்றாகப் புனித நீராடலைப் போற்றுவர். இரண்டாவது பாடலில், 'கங்கை யாடிலென் காவிரியாடிலென் கொங்கு தண்குமரித்துறை யாடிலென் ஒங்கு மாகடலோத நீராடிலென்', என்று கங்கை, காவிரி, குமரி ஆகிய ஆறுகளிலும் பெருங்கடலிலும் நீராடுவதைக் காட்டிலும் உயர்ந்தது எங்கும் ஈசனென்று சொல்வதே என்று ஓங்கியுரைத்தார் அப்பர்.

மூன்றாவது பாடலிலோ சாடலைச் சற்றே உயர்த்தினார். சைவ சித்தாந்தத்தில் 11 ருத்திரரும் மனம் ஒன்றுடன் சேர்ந்த 10 வாயுக்களும் என்று எண் பதினொன்றுக்கும் சிறப்புண்டு. கோயில் வழிபாட்டை முன்னின்று நடத்தும் பட்டரானாலென்ன? இறைவழிச் சான்றோர் சொன்ன சாத்திரங்களைக் கேட்டாலென்ன? அடுத்தவருக்குக் கொடுத்து மகிழும் ஈதலைப் பற்றினாலென்ன? சித்தாந்தங்கள் வகுத்த பதினொன்றை அறிந்தால் கிட்டும் பயன்தானென்ன? விருப்பமெல்லாம் ஈசனொருவனே என்று சொல்லாதவர்களுக்கு அவற்றால் பயன் ஒன்றுமில்லையாம்.

'படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும் உடையான் அரசருள் ஏறு' என்று வள்ளுவர் அரசியலில் ஆறங்கம் விளக்க, பத்திமையை உரிமை கொண்டாடிய குலங்களோ வேதத்தின்



ஆறங்கங்களை முன்வைத்தன. அப்பரின் எதிர்ப்புக்குரல் அதையும் சுட்டத் தவறவில்லை. அடுத்த பாடலில், 'வேத மோதிலென் வேள்விகள் செய்யிலென் நீதிநூல்பல நித்தல் பயிற்றிலென் ஓதியங்கம் ஓராறு முணரிலென்'ஞ்.ஈசனை மனத்துள்வைத்து உருகுவார்களுக்கு மட்டுமே அருளுண்டு என்றுரைத்தார்.

சமயம் சார்ந்த சில கடமைகளை

அடுத்த பாடலில் குறிப்பிட்டார். மனம் பொருந்தி ஈசனென்றுருகாமல் அதிகாலையில் குளித்து, தவறாமல் விதிகளின்வழி நின்று, ஆலைகளில் வேள்விகள் செய்தாலும் பயனொன்றும் கிட்டப்போவதில்லை என்பதே அது.

ஞானமெய்தும் பொருட்டு, காடுகளில் திரிவதும் பெருந்தவங்கள் புரிவதும் உணவையொழித்து நோன்பிருந்து வானை நோக்குவதும் என்ன பயனைத் தந்துவிடும்? இறைவன் ஞானமாகியவன் என்றுருகுவார்களுக்கன்றி மற்றவர்களுக்கு நன்மையில்லை என்பது அவருடைய தெளிவு.

பத்திமை விதிகளால் கட்டுண்டோரும் அவ்விதிகளே இறைவனையடையும் வழிகளென்று மற்றவரைக் கட்டுக்குள்வைக்க முற்பட்டோரும் இந்நேரத்திற்குள் பதுங்க இடம் தேடியிருக்கக்கூடும். அந்த அளவிற்குத் தாக்கம் நிறைந்த சொல்லாடல் நாவுக்கரசருடையது. அம்பலக்கூத்தனைப் பாடாமல் வேடங்கள் புனைந்து பத்திமைப் பூண்டோரையும் ஊனை வருத்தித் திரிவோரையும் முன்னிறுத்தி அம்பு தொடுத்தார் அடுத்த பாடலில்.

'உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை அற்றே தவத்திற் குரு', என்று தவத்தின் உருவை வள்ளுவர் அனைவருக்கும் பொதுவாக்கித் தெளிவுபடுத்தினார். தாமுற்ற துன்பத்தைப் பொறுப்பதும் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாமலிருப்பதுமே தவமாம். அப்பரோ தவத்தைக் கொண்டு வேறொரு பார்வையை முன்வைக்கிறார். நன்கு தவம் செய்தாலும், பட்டினி கிடந்தாலும், குன்றமேறிப் பெருந்தவம் புரிந்தாலும் ஒரு பயனுமில்லை; ஈசனென்று சொன்னால்மட்டுமே பயனுண்டு என்பதே அவருடைய எளிய வாக்கு.

அன்பையும் பற்றையும் விடுத்து இறைவனுக்கும் அன்பருக்குமிடையே பலவிதத் தளைகளை ஏற்படுத்திய சமூகத்தை நோக்கி, இதைவிட அழுத்தமாகக் கேள்வியெழுப்பிய துணிவு எவருக்காவது அவர் காலத்தில் மட்டுமல்ல தொடர்ந்த நூற்றாண்டுகளிலும் இருந்திருக்குமா? அப்பரின் சாட்டையடிக்கிணையாக வேறொரு பத்திமைப் படைப்பைப் பார்க்கவியலாது.

கங்கைக் காவிரிக் குமரி நீராடலும், வேத வேள்வி நீதிநூல் சாத்திரங்கள் ஓதலும், காடு திரிந்து தவம் செய்தலும், பட்டினி கிடந்து உடலை வருத்தலும், இறைவன்பால் கொண்ட உண்மை அன்பின்முன் ஒன்றுமில்லை என்பதை அன்பாகச்

சொன்னால் இன்றும் கேட்பார் யார்? அதற்காகவே கணைகள் தொடுக்கும் இந்தப் பதிகம் முழுதும் தந்தவர், ஒன்பதாவது பாடலில் உணர்ச்சிப் பிழம்பாய் வெடித்தார்.

கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை

ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல்

ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி

மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே

(05.099.09)

பார்த்துப் பார்த்துப் பேசிப் பேசிச் சொல்லிச் சொல்லிப் பொறுமை காத்துச் சோர்ந்துபோன அப்பரின் தொண்டுள்ளம் பொறுமையிழந்த பல நேரங்களில் உதிர்த்த வரிகளின் வீச்சு, இன்றும் நம்மைத் தாக்கும் இயல்புடையது. அதனால்தான், அரனிடத்தில் அன்பின்றிச் சடங்குகளை மட்டும் தவறாமல் கடைப்பிடிப்போரை மூடரென்று சினந்து கூறுகிறார். அதிலும், ஓடும் நீரை ஓட்டைக் குடத்தில் மூடி வைத்த மூடருக்குச் சமமானவர்களாம் அத்தகையோர்.

'அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்' என்று வள்ளுவர் சொன்ன அறிவார் தொழிலைப் பத்திமை நெறியில் புகுத்திப் பொருள் சொன்னவர் நாவுக்கரசர். அதனால்தான் தனித்தொளிரும் சமூகப் பார்வையால், தேவையற்ற சடங்குகள் பிரிவினைகள் வேறுபாடுகள் கட்டுப்பாடுகள் களைந்து வாழ உறுதிபடப் பாடினார்.

ஒற்றை மனத்தில் இறைவன் ஒருவன்பால் ஒருமுகப்படுத்தப்பட்ட பற்றை மட்டுமே அச்சாணியாகக் கொண்டு நகரும் வாழ்வில், பிரிவினைகள் மட்டும் பலப்பலவாக இருப்பது சரியா? அன்புநிறைந்த நெஞ்சத்தகத்தில் வேறுபடுத்தும் சிந்தனைகள் எதற்கு? தாம் கடந்துவந்த பெருந்துயர் வாழ்க்கையில் தம் இன்னல் களைந்த ஈசனை மட்டும் நினைக்கவில்லை அப்பர். அந்த ஈசனைப் பற்றிய அடியார்கள் நிலையையும் எண்ணியெண்ணிப் புழுங்கிய மனம் அவருடையது. அதனால்தான், அவர் பாடல்கள் வெறும் பாடல்களாக மட்டும் ஒலிக்காமல், பாடங்களாகவும் திகழ்கின்றன.

நன்றி: டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சிராப்பள்ளி.

# பண்டெழுவர் தவத்துறை

பகுதி–4

(சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள தவத்துறையில் அமைந்துள்ள திருக்கோயில் அமைப்பு குறித்த கட்டுரையின் தொடர்ச்சி)

இரா. கலைக்கோவன்,
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

## மண்டபங்கள்

விமானக் கட்டுமானத்தை அப்படியே பின்பற்றியுள்ள முகமண்டபத்தில் பத்திப் பிதுக்கமோ, கோட்டங்களோ இல்லை. ஆனால், அதன் இருபுறச் சுவர்களையும் பழங்கல்வெட்டுகள் நிறைத்துள்ளன. இம்மண்டபத்தின் வடபுற உபானத்திலும் நீர்வழி ஒன்று காட்டப்பட்டுள்ளது. பெருமண்டப வட, தென் உட்சுவர்கள் (பழைய கட்டுமானத்தின் புறச்சுவர்கள்) முகமண்டபம் ஒட்டிய கட்டமைப்புடன் வேதிபாதச் சிற்பங்களின்றி அமைந்திருந்த போதும் பக்கத்திற்கொரு அகலமான கோட்டம் பெற்றுள்ளன. வெறுமையான அக்கோட்டத்தை வேலைப்பாடற்ற மகரதோரணம் தலைப்பிட்டுள்ளது. வடசுவரின் மேற்குத் திருப்பத்திலிருந்து 5.14 மீ. அளவில் 68 செ.மீ. அகலத்திற்குப் பிரதிவரி, வேதிகைத்தொகுதி ஆகியன அகற்றப்பட்டுள்ளமை, அப்பகுதி பெருமண்டபத்திற்கான வடக்கு வாயிலாக இருந்து பின்னாளில் அடைக்கப்பட்டிருக்கலாம் எனக் கருதச் செய்கிறது.

பெருமண்டப வெளிச்சுவர் பத்மபந்தத் தாங்குதளத்தின் மீதெழும் உறுப்புவேறுபாடற்ற நான்முக அரைத்தூண்கள் கொண்டுள்ளது. அவற்றின் மேலுள்ள வெட்டுத் தரங்கப் போதிகைகள் உத்திரம் தாங்க, மேலே வாஜனம், வெறுமையான வலபி. ஆழமற்ற கூடுகளும் சந்திரமண்டலமும் பெற்றுள்ள கபோதம் மேலே பூமிதேசத்துடன் மீண்டுமொரு உத்திரம், வாஜனம், வலபி கொண்டு முடிகிறது.

### சிற்பங்கள்

தவத்துறைக் கோயில் சிற்பங்களை அளவு கருதிப் பெரியன, இடைநிலையின, சிறியன என மூவகைப்படுத்தலாம். இறைவன் திருமுன் காவலர்கள், கோட்டச் சிற்பங்கள் ஆகியவற்றை முதல் வகையிலும் இறைவன் விமான வேதிபாதங்கள், மகரதோரண வளைவு, அம்மன் கோயில் வடசுற்றுச் சுவர் வேதிபாதங்கள் ஆகியவற்றில் இடம்பெற்றுள்ள சிற்பங்களை மூன்றாம் வகையிலும் இணைக்கலாம். ஏனையன இரண்டாம் வகையின.

## பெருஞ்சிற்பங்கள்

### காவலர்கள்

இறைவன் கோயில் உள்சுற்று வாயிலைக் காப்பவர்களாய் இரண்டு காவலர்களும் முகமண்டப வாயிலுக்குக் காவலாக இரண்டு காவலர்களும் உள்ளனர். வெளிக்காவலர்கள் உள் காவலர்களினும் அளவில் சற்றே பெரியவர்களாக இருப்பினும் காலத்தால் பிற்பட்டவர்கள்.

வெளிக் காவலர்கள்

வாயில் நோக்கி உடலை ஒருக்கணித்துள்ளபோதும், நேர் நோக்கிய பார்வையராய் உள்ள இவ்விருவருள், வடக்கர் தம் இடப்புறத்து நிறுத்தியுள்ள பெருமழுவின் கத்திப்பகுதியில் வலப் பாதத்தை இருத்தி, இடப்பாதத்தைத்



திரயச்ரத்தில் திருப்பியுள்ளார். அவருடைய வலக்கை அச்சுறுத்த, இடக்கை மழு மீதுள்ளது. சிம்மமுக முகப்பணி பெற்ற சடைமகுடம், பனையோலைக் குண்டலங்கள், முப்புரிநூல், உதரபந்தம், சவடி, சரப்பளி, தோள், கை வளைகள், தாள்செறிகள் கொண்டுள்ள அவரது இடையில் இடைக்கட்டு இருத்தும் சிற்றாடை. தெற்கர் இடப்பாதத்தை மழுமீது ஊன்றி வலப்பாதத்தைத் திரயச்ரமாக்கியுள்ளார். வலக்கை மழுமீதிருக்க, இடக்கை வியப்பில் ஆழ்ந்துள்ளது. ஆடை,

அணிகலன்கள், வடக்கர் போலவே அமைய, இடையாடை தொடைப்பகுதிவரை நீண்டுள்ளது. இருவருக்குமே கோரைப்பற்கள் உள்ளன.

### உள்காவலர்கள்

முகமண்டபக் காவலர்களில் கருவறைக்காய் ஒருக்கணித்துள்ள வடக்கரின் வலப்பாதம் மழுவின் கத்திப்பகுதி மேல் அமைய, இடப்பாதம் கருவறைக்காய்த் திரும்பியுள்ளது. உயர்த்திய வலக்கை அச்சுறுத்த, இடக்கை பாம்பு சுற்றியிருக்கும் மழு மீது இருத்தப்பட்டுள்ளது. நெற்றிப்பட்டத்துடனான நெடிய சடைமகுடம்,ஆந்தைக்குண்டலங்கள், கோரைப்பற்கள், அலங்கார முப்புரிநூல், உதரபந்தம், கண்டிகை, தோள், கை வளைகள், மோதிரங்கள், பாதங்களில் கிண்கிணிச்சரம், அரைக்கச்சு இருத்தும் தொடைவரை யிலான சிற்றாடை பெற்றுள்ள அவரது இருபுறத்தும் இடைக்கட்டின் முடிச்சுத் தொங்கல்கள் நெகிழ்ந்துள்ளன. வலத்தோளருகே படமெடுத்த பாம்பு. வடக்கருக்கு மாறாக நேர்நோக்கிய நிலையில் இருக்கும் தெற்கர், வலப்பாதத்தை மழு மீது ஊன்றி, இடப்பாதத்தைத் திரயச்ரத்தில் திருப்பியுள்ளார். வலக்கை மழு மீதமர, இடக்கை வியப்புக் காட்டுகிறது. அணிகலன்கள் வடக்கர் போலவே இருப்பினும்



குண்டலங்கள் அன்னம் கொள்ள, கழுத்தணி சரப்பளியாகியுள்ளது. இவருக்கும் கோரைப்பற்களும் இடைக்கட்டும் உள்ளன.

## கோட்டத்திருமேனிகள்

### பிச்சைத்தேவர்

தாமரைத்தளத்தின் மீது மிதி யடிகளுடன் நிற்கும் பிச்சைத் தேவரின் வலப்பாதம் சமத்திலும் இடப்பாதம் பார்சுவத்திலும் உள்ளன. சடைமகுட முகப்பில் மண்டையோடு. வலச்செவி பனையோலைக் குண்டலம் கொள்ள, இடச்செவி அணியின்றி நீண்டுள்ளது. கழுத்தில் சவடிகள்.

பாம்புகளே தோள்வளைகளாக, மணிக்கட்டுகளில் வளைகள். நக்கராய் நெற்றிக்கண் பெற்று நிற்கும் அவரது நான்கு திருக்கைகளில் வலமேற்கை துடியேந்த, இடமேற்கை கடகத்தில் உள்ளது. முன்கைகளில் வலக்கை மானுக்குப் புல் அளிக்க, இடப்புறம் தலையோடு. இடத்தோளில் சாமரம் ஒன்று மேல்துண்டெனக் கிடத்தப்பட்டுள்ளது.இடையணியாய்ப் பாம்பு பின்னியிருக்க, முப்புரிநூல் பெற்றுள்ள இறைவனின் இடப்புறம், இடக்கையால் தலை மீதுள்ள பாத்திரத்தைப் பிடித்தவாறு வலக்கையை நெகிழ் கையாக்கி நிற்கும்பூதம் சடைப்பார அலங்கரிப்பில் முப்புரி நூலுடன் பிச்சைப்பயண நினைவுகளில் முழ்கியுள்ளது.

### அம்மையப்பர்

பொதுவாக மூன்று கைகளுடன் விளங்கும் முற்சோழர் அம்மையப்பர் சிற்பங்களிலிருந்து மாறுபட்டு, நான்கு கைகளுடன் தாமரைத்தளத்தில் காட்சிதரும் தவத்துறை அம்மையப்பரின் சிவப்பகுதிக் கைகளில் முன்கை, அருகிலுள்ள நந்தியின் தலைமீது பரிவுடன் அமர, பின்கையில் மழு. உமைப்பகுதிக் கைகளில் தாமரைமொட்டும் மானும். சவடி, சரப்பளி, முப்புரிநூல், தோள், கை வளைகள், சிலம்பு அணிந்துள்ள அம்மையப்பரின் சடைமகுடம் அம்மைக்கும் அப்பருக்கும் ஏற்ப, இருவேறு அமைப்புகளில், சடைவளையங்கள் இருபுறத்தும் பரவியிருக்குமாறு முடியப்பட்டுள்ளது. இறைப்பகுதி மகுடத்தில் பிறை. இறைவன் மகரகுண்டலம் கொள்ள, உமை பனைச்சுருள் பெய்துள்ளார். இறைவன் ஆடை தோலாடையாய்த் தொடைவரை நீள, அம்மையின் பட்டாடை கணுக்கால்வரை காட்டப்பட்டுள்ளது. ஆடையை அரையிலிருத்தும் அரைக்கச்சின் பூவடிவ நடுப்பதக்கத்திலிருந்து இருகால்களிடையே நெகிழும் முடிச்சுத்தொங்கல்கள் சிறக்கக் காட்டப்பட்டுள்ளன.

### வீணையேந்திய பெருமான்

தாமரைத்தளத்தில் சமத்தில் பாதங்களை நிறுத்தி, இடமுழங்காலைச் சற்று மடித்த நிலையில் வீணை வாசிக்கும் இறைவனின் சடைமண்டலக் குழல்கள் முகத்தின் இருபுறத்தும் பரவியுள்ளன. சடைமண்டல நடுவில் பதக்க அணி போல் மண்டையோடு. வலச்செவியில் மகரகுண்டலமும் இடச்செவியில் பனையோலைக் குண்டலமும் கொண்டுள்ள இறைவன் முப்புரிநூல், உதரபந்தம், தோள், கை வளைகள், சிற்றாடை, அரைக்கச்சு, இடைக்கட்டு அணிந்து, பின்னிரு கைகளைக் கடகத் திலிருத்தி, முன்னிரு கைகளால் வீணை மீட்டுகிறார். இறைவனின்



இரண்டு தொடைகளையும் இடைக்கட்டு முடிச்சின் தொங்கல்கள் தழுவியுள்ளன.

இடைநிலைச் சிற்பங்கள்

முதல் கோபுரத்தின் கீழ்நிலை, அம்மன் திருமுன் கீழ்த்தளக் கோட்டங்கள், இறைவன், இறைவி கிரீவகோட்டங்கள், சுற்றுத் திருமுன்கள், மாளிகை ஆகியவற்றிலுள்ள இடைநிலைச் சிற்பங்களுள் சில சோழர் காலத்தவை. வண்ணப்பூச்சுகளுக்கு ஆளாகியுள்ள சிற்பங்களின் காலம் அறியக்கூடவில்லை.

## ஊர்த்வஜாநு பிள்ளையார்

முதற் கோபுர வாயிலின் வடகோட்டத்தில் உள்ள ஊர்த்வஜாநு பிள்ளையார், வலமுழங்கால் உயர்த்தப்பட்ட நிலையில் இடப்பாதத்தைப் பார்சுவமாகத் திருப்பியுள்ளார். வல முன் கையில் உடைந்த தந்தமும் பின்கையில் அங்குசமும் கொண்டுள்ள அவரது இடப் பின் கை அர்த்தரேசிதத்தில் அமைய, இருபுறத்தும் உடைந்த தந்தங்களுடன் உள்ள துளைக்கை, இட முன் கை மோதகத்தைச் சுவைக்கிறது. கரண்டமகுடம், தோள், கை வளைகள், முப்புரிநூல், சிற்றாடை, உதரபந்தம் பெற்றுள்ள அவரது தலைக்கு மேல் குடையும் இருபுறத்தும் சாமரங்களும் உள்ளன.

## சூரியன்

இரண்டு கைகளிலும் மலர்ந்த தாமரைகளை ஏந்தியுள்ள சூரியன் கரண்டமகுடம்,கணுக்கால்வரைநீளும் பட்டாடை, ஒளிவட்டம், அரைக்கச்சின் பதக்கத்தில் கீர்த்திமுகம் கொண்டு காட்சிதருகிறார். செவிகளில் மகரகுண்டலங்கள்.

## தளக்கோட்டச் சிற்பங்கள்

அம்மன் விமானத் தளக்கோட்டங்களிலும் முகமண்டபக்

கோட்டங்களிலும் உள்ள சிற்பங்களுள் நான்கு பெண்தெய்வங்களாக உள்ளன. அவை அனைத்துமே சமபங்கத்தில் முன்கைகளில் காக்கும், அருட்குறிப்புகள் கொண்டு, மாறுபட்ட கிரீடமகுடங்களுடன் கழுத்தணிகள், சிலம்புகள் பெற்றுக் காட்சிதருகின்றன. கௌரியின் பின்கைகளில் அங்குசமும் மானும் அமைய, வைணவி சங்கு, சக்கரம் பெற்றுள்ளார். நான்முகி குண்டிகையும் அக்கமாலையும் கொள்ள, கௌமாரி என்றழைக்கப்படும் மகேசுவரி பாசமும் துடியும் கொண்டுள்ளார்.

### சுற்றுத் திருமுன் சிற்பங்கள்

அம்மன் திருமுன் சுற்றுப் பிள்ளையார் கரண்டமகுடம், முப்புரிநூல், சிற்றாடையுடன் தாமரைத்தளத்தில் இலலிதாசனத்தில் உள்ளார். பின்கைகளில் பாசம், அங்குசம். முன்கைகளில் தந்தம், மோதகம். மேற்குத் திருமுன் ஆறுமுகன் பன்னிரு கைகளில் முன்னிரு கைகளைக் காக்கும், அருட்குறிப்புகளில் அமைத்து மயில்மீது அமர்ந்துள்ளார். கரண்டமகுடமும் கழுத்தணிகளும் பெற்றுள்ள அவரது இருபுறத்தும் உள்ள தேவியர் ஒரு கையில் மலரேந்தி, மறுகையை நெகிழ்த்தியுள்ளனர்.

இறைவன் சுற்றின் தெற்கில் தனித் திருமுன்னில் சடைப்பாரம், பனையோலைக் குண்டலங்கள், கண்டிகை, முத்துமாலை, சவடி, தோள், கை வளைகள் முப்புரிநூல் அணிந்து, சுகாசனத்தில் உள்ள சண்டேசுவரரின் வலக்கை மழுவேந்த, இடக்கை தொடைமீது உள்ளது. அமிர்தகடேசுவரர் திருமுன்னின் தென்கோட்ட வீராசன ஆலமர் அண்ணலின் பின்கைகளில் பாம்பும் தீயகலும் அமைய, வல முன் கை சின்முத்திரை காட்டுகிறது. சடைப்பாரம், மகர, பனையோலைக் குண்டலங்கள், முப்புரிநூல், இடைச்சிற்றாடை பெற்றுள்ள அவரது இட முன் கையில் ஏடு. பின்னுள்ள மரக்கிளையில் பொக்கணம்.

## மாளிகைச் சிற்பங்கள்

### கட்வாங்கர்

கருங்கல் தளத்தின் மேல் நெற்றிப்பட்டம் தழுவிய சடைப்பாரத்தில் பதக்கமெனத் தைத்த மண்டையோட்டுடன் சுகாசனத்தில் காட்சிதரும் கட்வாங்க சிவபெருமானின் வல முன் கை வீணையேந்தியுள்ளது. சிதைந்துள்ள இவ்வீணையின் குடம் வலத்தோளில் தாங்கலாக, வலப் பின் கையில் முத்தலையீட்டி. இட முன் கை தொடை மீதமர, பின்கையில் கட்வாங்கம். தமிழ்நாட்டுக் கோயில்களில் கட்வாங்கத்துடன் கண்டறியப்பட்ட முதல் சிவத்திருமேனி இதுவென்று துணியலாம். நெற்றிக்கண், கோரைப்பற்கள், மகர, பனையோலைக்

குண்டலங்கள், சவடி, சரப்பளி, தோள், கை வளைகள், முப்புரிநூல், உதரபந்தம் பெற்றுள்ள இவர் கைக் கட்வாங்கத்தை அப்பர், சம்பந்தர், சுந்தரர் மூவருமே பாடியுள்ளனர்.33 எனினும் பதினெட்டு இடங்களில் அதைச் சுட்டிப் பெருமை செய்பவர் அப்பர் பெருமானே.34 வடமாநில சிவத்தோற்றங்களில், ஆடவல்லான் உட்படப்பலவடிவங்கள்இக்கருவியைக் கொண்டுள்ளன. மண்டையோடு பொருத்தப்பட்ட மேற்கை அல்லது தொடை எலும்பே கட்வாங்கம் எனக் கூறும் திரு. கோபிநாதராவ் அதைச் சிவ வழிபாட்டின் தொன்மைத் தன்மைக்கான குறியீடாகக் கொள்கிறார்.

### சாமுண்டி

சடைப்பாரம், சரப்பளி, தோள், கை வளைகள், தாள்செறிகள் பெற்று, சுகாசனத்தில் உள்ள சாமுண்டியின் வலச்செவியில் பிணக்குண்டலமும் இடச்செவியில் பனையோலைக் குண்டலமும் உள்ளன. வல முன் கை காக்கும் குறிப்பிலிருக்க, இட முன் கையில் தலையோடு. பின்கைகளில் முத்தலைஈட்டியும் அக்கமாலையும் கொண்டுள்ள அவரது இடையாடை தொடைவரை சுருக்கப்பட்டுள்ளது. கச்சற்ற மார்பகங்களைப் பாம்பு சுற்றியுள்ளது.

### கொற்றவை

சமபங்கத்தில் பின்கைகளில் சங்கும் சக்கரமும் கொண்டு கரண்டமகுடம், மகரகுண்டலங்கள், மார்புக்கச்சு, இடைப் பட்டாடை பெற்று நிற்கும் கொற்றவையின் வல முன் கை காக்கும் குறிப்புக் காட்ட, இட முன் கை கடியவலம்பிதமாக உள்ளது.

### இறைவன் கிரீவகோட்டச் சிற்பங்கள்

மேற்குக் கோட்டத்தில் கிரீடமகுடம், பட்டாடை அணிந்து, அர்த்தபத்மாசனத்தில் உள்ள விஷ்ணுவின் முன்கைகள் காத்து, அருள் செய்யப் பின்கைகளில் சங்கு, சக்கரம்.வடக்குக்கோட்டநான்முகனும் முன்கைகளை அது போலவே அமைத்துத் தாமரைத்தளத்தில் அர்த்தபத்மாசனத்தில் உள்ளார். சடைமகுடரான அவரது பின்கைகளில் அக்கமாலை, குண்டிகை. கிழக்குக் கோட்டத்தில் உமாவை இடத்தொடையில் அமர்த்தி அணைத்தவராய் சுகாசனத்தில் உள்ள சிவபெருமானின் பின் கைகளில் மழு, மான். முன்கைகளில் வலக்கை காக்கும் குறிப்புக் காட்ட, இடக்கை உமையைத் தழுவியுள்ளது. தெற்குக் கோட்ட வீராசன ஆலமர்அண்ணல் பின்கைகளில் பாம்பும் தீயகலும் கொண்டு, வல முன் கையைக் காக்கும் குறிப்பிலும் இட முன் கையைத் தொடைமீதும் வைத்துள்ளார்.

(தொடரும்)

(திருவிளையாடற் புராணம் தொடர்)

# ஆடலுக்கு ஆட்படுவோம்

பகுதி-1

## 1.சித்தி விநாயகனை வணங்குவோம்



காசி ஸ்ரீ முனைவர்
நா.ரா.கி.காளைராசன்
(மேனாள் துணைப்பதிவாளர், அழகப்பா பல்கலைக்கழகம்)

இறைவன் நித்தமும் எண்ணற்ற திருவிளையாடல்களை நிகழ்த்திக் கொண்டே இருக்கின்றான். ஆட்டுவித்தால் யார் ஒருவர் ஆடாதாரே, பாட்டுவித்தால் யார் ஒருவர் பாடாதாரே ....... இறைவனே ஆட்டுவிக்கிறான். அவனே ஆடலும் செய்கிறான். அவனின் திருவிளையாடலால் மதுரை பெருமை பெற்றது. திருமாலின் அவதாரங்களில் முதல் அவதாரமாகிய மச்சவதாரம் மதுரையில் அமைந்தது என்பது மதுரைக்கு மற்றுமொரு சிறப்பு.

மதுரை மாநகருக்குக் கடம்பவனம், கூடல்நகர், நான்மாடக் கூடல், ஆலவாய், சிவபுரம், மன்றல், மதுரா நகர், வான்நகர், வளநகர், விழவுநகர், திருநகர், கடிநகர், முதுநகர், முத்துநகர், தொல்நகர், தூங்கா நகர் முதலான பல்வேறு சிறப்புப் பெயர்கள் உள்ளன.

மதுரையில் நிகழ்ந்த எம்பெருமானின் திருவிளையாடல்களை பெரும்பற்றப்புலியூர் நம்பியும், வேம்பத்தூராரும், பரஞ்சோதி முனிவரும் அவரவர் கைவண்ணத்தில் திருவிளையாடற் புராணமாக ஆக்கித் தந்துள்ளனர். எனவே இறைவன் ஆடிய ஆடல்கள் மூன்று வகைகளில் நமக்குப் படிக்கவும் உணரவும்

கிடைக்கின்றது. இவற்றில் பரஞ் சோதி முனிவரின் திருவிளையாடற் புராணம் தெளிவும் சிறப்பும், கவிதைச் சிறப்பும் உடையது.

## பரஞ்சோதி முனிவர்

இவர் வேதாரணியம் என்றும் திருமறைக்காடு என்றும்



அழைக்கப்படுகின்ற திருத்தலத்தில் மீனாட்சிசுந்தரதேசிகர் என்பவரின் மகன் ஆவார். இவர் மதுரையில் சந்நியாசம் பெற்றார். பரஞ்சோதி என்பது சிவபெருமானின் பெயர்களுள் ஒன்றாகும். நாரைக்கு முத்தி கொடுத்த திருவிளையாடலைக் கூறும் திருவிளையாடல் புராணத்தின் 2310ஆவது பாடல் சிவபெருமானைப் சிவபரஞ்சோதி என்று குறிப்பிடுகிறது.

இவர் தமிழிலும் வடமொழியிலும் புலமை மிகுந்தவர். மதுரை மீனாட்சியம்மை பரஞ்சோதி முனிவரின் கனவில் தோன்றிச் சிவபெருமானின் திருவிளையாடல்களைப் பாடும்படி கூறி அருளினாள். அன்னை அருளிச் செய்தபடி பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல் புராணத்தை இயற்றி மதுரை அருள்மிகு சுந்தரேசுவரர் சந்நி தியில் அரங்கேற்றம் செய்துள்ளார். இவர்

1)திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா

2)மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி
3)வேதாரணிய புராணம்

என்ற பிற நூல்களையும் எழுதியுள்ளார். இவரது காலம் கி.பி.17ஆம் நூற்றாண்டு என்கின்றனர். ஆனால் இவர் வடமொழியிலிருந்து மொழிபெயர்த்துப் பாடியுள் திருவிளையாடற் புராணச் செய்திகள் தொன்மையானவை.

## திருவிளையாடற் புராணம் – அரங்கேற்றம்

“ அறு கால் பீடத்து உயர் மால் ஆழி கடைந்த அமுதை அரங்கேற்று மா போல்

அறுகால் பேடு இசைபாடும் கூடல் மான்மியத்தை அரும் தமிழால் பாடி

அறுகால் பீடு உயர் முடியார்

சொக்கேசர் சந்நிதியில் அமரர் சூழும் அறுகால் பீடத்து இருந்து பரஞ்சோதி முனிவர் அரங்கு ஏற்றி னானே.”

18 புராணங்களில் ஒன்று காந்தத் தீச சங்கிதை என்ற புராணம் ஆகும். இதில் ஈசனது கதைகள் பாடப்பெற்றுள்ளன. சங்கர சங்கிதை என்ற வடமொழி நூலை மொழிபெயர்த்து எழுதித்தர வேண்டும் எனப் பெரியவர்கள் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, அந்த வடமொழிநூலை மொழிபெயர்த்துப் பாடிச் சொக்கநாதர் (மீனாட்சி சுந்தரேசுவரர்) சந்நிதியில் ஆறுகால் பீடத்திலிருந்து பரஞ்சோதி முனிவர் அரங்கேற்றியதாகக் கந்தசாமிப் புலவர் பாடிய மேலேயுள்ள அவையடக்கப் பாடலில் குறிப்பிடுகிறார்.

மதுரையில் சிவபெருமான் நிகழ்த்திய திருவிளையாடல்கள் ஹாலாஸ்ய மகாத்மியம் என்னும் வடமொழி நூலில் உள்ளன. வியாசர் இயற்றிய ஸ்கந்த புராணத்திலும் சொல்லப்பட்டுள்ளன. நந்திதேவர் சனத்குமார முனிவருக்குப் புராணக் கதைகளைச் சொன்னார் என்றும், அதை வியாசருக்குச் சனத்குமாரர் சொன்னார் என்றும், வியாசர் அதை ஸ்கந்தபுராணத்தில் எழுதினார் என்றும் குறிப்புகள் உள்ளன.

ஹாலாஸ்ய மகாத்மியம், ஸ்கந்தபுராணம் இவற்றில் உள்ள செய்திகளை மனத்துள் வாங்கிக் கொண்டு பரஞ்சோதி முனிவர் தமிழில் மொழி பெயர்த்துத் தமிழுக்கே உரித்தான செய்யுள் நடையில் திருவிளையாடற் புராணத்தை எழுதியுள்ளார்.

## திருவிளையாடற் புராணம் அமைப்பு முறை

திருவிளையாடற் புராணத்தின் தொடக்கத்தில் விநாயகர் வாழ்த்து “காப்புச் செய்யுளாக” இடம் பெற்றுள்ளது. தொடர்ந்து வாழ்த்து, நூற்பயன், கடவுள் வாழ்த்து, பாயிரம், அவையடக்கம், திரு நாட்டுச் சிறப்பு, திருநகரச் சிறப்பு, திருக்கைலாயச் சிறப்பு, புராண வரலாறு, தல விசேடம், தீர்த்தவிசேடம், மூர்த்தி விசேடம், பதிகம் என்று வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. பதிகத்தைத் தொடர்ந்து 64 திருவிளையாடல்களும் பாடப் பெற்றுள்ளன. மொத்தம் 3363 செய்யுள்கள் உள்ளன. இதில் முதல் 343 செய்யுள்கள் காப்பு, மதுரை நகர சிறப்பு உள்ளிட்டவற்றை உள்ளடக்கியது. 344ஆவது செய்யுள் முதல் தான் பெருமானின் திருவிளையாடல் தொடங்குகிறது.

திருவிளையாடற் புராணம்

மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு காண்டத்தினுள்ளும் படலங்கள் என்ற தலைப்பில் திருவிளையாடற் புராணக் கதைகள் இடம் பெற்றுள்ளன.

## காண்டங்கள்

திருவிளையாடற் புராணமானது, மதுரைக்காண்டம் 18 படலங்கள், கூடற்காண்டம் 30 படலங்கள், திருவாலவாய்க் காண்டம் 16 படலங்கள் என மூன்று காண்டங்களைக் கொண்டுள்ளது. இந்திரன் பழி தீர்த்த படலம் முதல், வருணன் அனுப்பிய கடல்நீரை சிவன் வற்றச் செய்த படலம் வரை மதுரைக்காண்டத்தில் இடம் பெற்றுள்ளன. நான் மாடக்கூடலான படலம் முதல் நாரைக்கு முக்தி அளித்த படலம் வரை கூடற்காண்டத்தில் உள்ளன. திருஆலவாயான படலம் முதல் வன்னியும், கிணறும், லிங்கமும் அழைத்த படலம் வரை திருஆலவாய்க்காண்டத்தில் இடம் பெற்றுள்ளன.

## கடல்கோள்களும் காண்டங்களும்

மதுரை கூடல் ஆலவாய் ஆகிய ஒவ்வொரு காண்டமும் மதுரையைக் கடல்கொண்ட நிகழ்வுகளுடன் தொடர்பு படுத்திப் பாடப் பெற்றுள்ளன. மூன்று காண்டங்களும் கடல்கோள்களில் தொடங்கிக் கடல்கோளில் முடிவடைகின்றன. கடல்கோள்களை விவரித்துப் பாடுவதும், கடல்கோள்களின் அடிப்படையில் படலங்களைத் தொகுத்து அமைத்துள்ள அமைப்பு முறையும் எந்தவொரு தமிழிலக்கியத்திலும் உலக இலக்கியத்திலும் காணப்படாத சிறப்பு ஆகும்.

படலங்கள் திருவிளையாடல் செய்தியை மட்டும் கூறாமல், மற்ற பிற செய்திகள் பலவற்றையும் சேர்த்துப் பாடியுள்ளார் பரஞ்சோதி முனிவர். இவ்வாறு ஒன்றோடொன்று பொருந்தாத ஓரினமில்லாத பலவகைப் பொருள்களை அவை ஒன்றன் பின் ஒன்றாய்த் தொடர்ந்து வருமாறு நூலில் வரிசைப்படுத்திக் கூறுவது படலம் எனப்படும். திருவிளையாடல் புராணத்தை பல்வேறு செய்திகளுடன் சேர்த்துச் சொல்லியுள்ள காரணத்தினால் பரஞ்சோதியார் இயற்றிய திருவிளையாடற் புராணம் மக்களிடம் பிரபலமாய் இருக்கிறது எனலாம்.

## விநாயகர் வாழ்த்து

எடுத்த காரியம் சித்திபெற இறைவனையும் இறைவியையும் எவ்வாறு வணங்கி வழிபட வேண்டும்? சக்தியாகவும் சிவமாகவும் உள்ள



(திருவிளையாடற் புராணம்)

சரிபாதி சத்தியாகியும் மறுபாதி சிவமாகியும் விளங்குகின்ற, ஒப்பற்ற பரமுத்திப் பேறாகியும் உள்ள, முதற் கடவுளான மதுரை அருள்மிகு சோமசுந்தரேசுவரரைத் துதிப்பதற்குச் சுத்தமான சொற்களையும் பொருளையும் வழங்குகின்ற, சித்திவிநாயகனான முக்குறுணிப் பிள்ளையாரின் பொற்பாதங்களை வணங்கிடுவோம்.

சித்தி விநாயகரை வணங்கி இத்திருவிளையாடற் புராணத் தொடர் ஆரம்பமாகின்றது. தொடர்ந்து திருநெல்லையில் திருவிளையாடல்கள் அமைய எம்பெருமான் கருணை கூர்வார்.

பார்வதி பரமேசுவரரை வலம் வந்து வணங்க வேண்டும். இவ்வாற வணங்கினால் ஞானத்தைப் பெறலாம். வலம் வந்து வணங்கும் முறையை உலக மக்களுக்கு முதன்முதலாக உணர்த்திய ஐந்துகரத்தனை யானைமுகத்தனைப் புந்தியில் வைத்து அடிபோற்றி முதலில் வணங்கிடுவோம்.

சத்தி ஆய்ச் சிவம் ஆகித் தனிப் பர
முத்தி ஆன முதலைத் துதி செயச்
சுத்தி ஆகிய சொல் பொருள் நல்குவ
சித்தி யானை தன் செய்ய பொன் பாதமே.

(தொடரும்)

## கோவிலூர் ஆதீன வெளியீடுகள் கோவிலூர் புதையல்கள் - 16

# திருநெல்லையந்தாதியும், திருக்கொற்றவாளீசரந்தாதியும்

- நூல் அறிமுகம்



- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

இந்நூல் 36 பக்கங்களைக் கொண்ட கையடக்க நூலாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஐந்தாம் பட்டம் சீர் வளர் சீர் வீரசேகர ஞானதேசிகரின் மாணாக்கரான, பல நூல்களை எழுதிய சுப்பைய ஞானதேசிகரால் எழுதப்பட்டுள்ளது. காரைக்குடி ஆ.வெ. வெங்கடாசலம் செட்டியாரால் 1910இல் , சென்னை கோமளேசுவரன் பேட்டை, சச்சிதானந்த அச்சு இயந்திர சாலைகள பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந் நூல் மூன்று பகுதிகளாக அமைகிறது. முதல் பகுதி, 18 பக்கங்களுக்கு திருநெல்லையந்தாதியாகவும், இரண்டாம் பகுதி, 19 முதல் 34 பக்கங்கள் வரை திரு கொற்றவாளீசரந்தாதியாகவும், மூன்றாம் பகுதி இரண்டு பக்கங்களில் சிருங்கேரி , சீர் வளர் சீர் சச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகள், கோவிலூர் வீரசேகர ஞானதேசிகரை ஆசீர்வதித்துப் பாடிய 5 பாடல்களாகவும் அமைந்துள்ளன.

### அந்தாதி

அந்தம் ஆதி என்ற சொற்களின் இணைப்பு அந்தாதி. அந்தம் என்றால் முடிவு. ஆதி என்றால் தொடக்கம். ஒரு பாடலின் இறுதிச் சொல் அடுத்த பாடலின் தொடக்கச் சொல்லாக அமைவது அந்தாதியாகும்.



உ

கணபதிதுணை.

சிவமயம்.

திருநெல்லையந்தாதியும்

திருக்கொற்றவாளீசரந்தாதியும்.

இவை

ஸ்ரீ சமிவன க்ஷேத்திரமென்னும்

ஸ்ரீ கோவிலூர்மடாலயம்

ஸ்ரீமன் முத்திராமலிங்க ஞானதேசிகர்

ஆதினத்திற்குரிய

ஸ்ரீவீரசேகரஞானதேசிகர் பாதசேகரராகிய

ஸ்ரீ சுப்பைய சுவாமிகளவர்களால்

இயற்றப்பட்டு,

ஷை ஸ்ரீ வீரசேகரஞானதேசிகர் மாணாக்கருள்

ஒருவராகிய காரைக்குடி-

ஆ. வெ. வேங்கடாசலஞ்செட்டியாரவர்களால்

சென்னை,

கோமளேசுவரன்பேட்டை,

சச்சிதானந்த அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

1910.

அப்படி அந்தாதியாக அமைந்த 200 பாடல்களின் தொகுப்பு இந்நூல்.

## திருநெல்லையந்தாதி

கோவிலூர் உறையும் திருநெல்லை அம்மன் மீது 100 பாடல்களாகப் பாடப்பட்டுள்ளது. திருநெல்லையந்தாதி மட்டும் தனி நூலாகவும் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

## காப்பு

கட்டளைக் கலித்துறையில் விநாயகர் வணக்கமாகக் காப்புப் பாடல் அமைகிறது.

“சசீரச் சடமக தேவரும் தேடும் தெருட்கரியே
ஈரச் சடமுடி எந்தைநின் நாடொழு தேத்திநின்பாற்
சேரச் சடமக மற்றுகண் டானந்த சேதநமாய் (அறிவு)
நேரச் சடமறு நெல்லைஅந் தாதி நிகழ்ந்திடுமே”

தேவர்களும் தேடுகின்ற அருள்நிறைந்த யானையே, ஈரச் சடை முடி கொண்ட என் தந்தையாகிய சிவனைத் தொழுது, ஏத்தி, உன்னைச் சேர, அறிவு வந்து நேர, திருநெல்லை அந்தாதி நிகழ்ந்திடுமே என்கிறார்.

இவ்வந்தாதியின் 30 வது பாடலாக அமைந்த ஒரு பாடல்,

“சேருஞ் சிறப்பொடுங் கல்வியு ஞானஞ் சிறந்த வன்பாற்
றேருஞ் சிறப்புறுஞ் செஞ்சடைத் தேவனுந் தேடுகின்ற
வாருஞ் சிறப்பறச் சாலியம் பாள்தக் கன்புமிக்காற்
சாருஞ் சிறப்புறும் வேலையுற் றாழ்தலுஞ் சார்தலின்றே.”

சிறப்பாகக் கல்வியும் ஞானமும் சிறந்து விளன்கின்ற ஒருவனிடம், சிவந்த சடை முடி கொண்ட சிவபெருமான் தானே வந்து சேருவார். அத்தகைய சிவனே தேடுகின்றவாறு சிறப்பாகச் சாலிப் பகுதியில்(சாலிவாடி என்று ஒரு காலத்தில் கோயிலூர் அழைக்கப்பட்டள்ளது) குடிகொண்டுள்ள திருநெல்லை

அம்பாள் மிக்க அன்பு மிக்கவள் என்று போற்றுகிறார்.

## கொற்றவாளீசரந்தாதி

கோவிலூர் இறைவன் கொற்வாளீசர் தொர்பான 100 அந்தாதிப் பாடல்கள் இப்பகுதியில் அமைகின்றன.

## காப்பு

இக்காப்புப் பாடலும் விநாயகர் பாடலாகவே அமைந்துள்ளது.

"சிற்சொருப மான சிவராச கட்கேசன்
பொற்சொருபம் போற்றிப் புகழவே – தற்சொருப
வானை முகத்தா னரவிந்த மாகதியற்
றேனை யெனக்கின் றினி"

அறிவு உருவமான சிவபெருமானது சொர்ண ரூபத்தைப் போற்றிப் புகழவே, ஆனை முகத்தானே பாடலை இயற்ற எனக்குதவி செய் என வேண்டுவதாக இப்பாடல் அமைகிறது.

இந்நூலின் 76 வது பாடலில்,

"காலைப் பிடித்தும் கடுமனதைக் கண்டித்தும்
பாலைக் குடித்தும் பலபுரிந்தும் – வாலைமண
வாளனெனும் வாளனுனை வந்தடைவார் வந்தடையத்
தாளைப் புகழுவன்யான றான்.

காலைப் பிடித்தும், பல வழிகளிலும் ஓடும் மனதைக் கட்டுப்படுத்தியும், பாலைக் குடித்தும், இது போன்று பல செயல்களைச் செய்தும், அம்பாளின் மணவாளனும், வாளைக் கையில் கொண்டவனுமான உன்னை வந்தடைவார் அடியவர் பலர். அவர்களின் தாளைப் புகழுவேன் யான். என்று பாடுகிறார்.

இறுதிப் பகுதியாக அமைந்த வீரசேகர ஞானதேசிகரை, சிருங்கேரி ச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி ஸ்வாமிகள் ஆசிர்வதித்துப் பாடிய 5 பாடல்களில் முதல் பாடல்,

"அமரமங் கையாற் சூழ்தரு பவளு
மகிலமா விடயவா சையினைச்
சுமையெனத் துறந்தோ ரடைதரு பவளும்
தூயயா முதனினா லழகு
சமைவுறு கமல மலர்க்கரத் தினளுஞ்
சததமாஞ் சாரதாம் பிகைதான்
விமலநன் மதியை யீந்துகாத் தருள்க
வீரமா முனிவரன் றனயே"

திருநெல்லை அம்பாளை பல விதமாக வருணித்து வேண்டி, வீரசேகர ஞானதேசிகரைக் காக்குமாறு வேண்டுகிறார்.

# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம் - 20

## எல்லாம் அவன்



- வாகீச கலாநிதி
கி.வா. ஜகந்நாதன்

“கடவுள் எங்கே இருக்கிறான்?” என்ற கேள்வியைக் கேட்பதைவிட, “அவன் எங்கே இல்லை?” என்று கேட்பது எளிது. அவன் இல்லாத இடம் ஏது? அவன் எப்படி இருக்கிறான்?

மனிதனுடைய அறிவு சிற்றறிவு என்றாலும் பிறந்தது முதல் அவன் அறிவு வளர்கிறது. அநுபவத்தாலும் ஆராய்ச்சியாலும் கேள்வியாலும் நூல்களைப் படிப்பதனாலும் அவனுடைய அறிவு விரிகிறது. முதலில் திட்பமானவற்றை அறிந்து கொள்கிறான். பிறகு நுட்பமானவற்றை அறிந்து கொள்கிறான்.

குழந்தை முதலில் அன்னையை அறிந்து கொள்கிறது; அவள் தனக்குப் பால் கொடுப்பதைத் தெரிந்து கொள்கிறது; அணைப்பதை அறிகிறது. ஆனால் அவளுடைய அன்பின் பெருமையை வளர்ந்த பிறகே தெரிந்து கொள்ள முடிகிறது. அன்பினால் செய்யும் செயல்கள் திட்பமாக இருப்பதனல் அவற்றைக் கண்முன்னே பார்த்துத் தெரிந்து கொள்ளும் அறிவுதான் ஆரம்பத்தில் இருக்கிறது. காட்சிப் பொருளை அறியும் அறிவு அது. பிறகு இந்தச் செயல்களுக்கெல்லாம் காரணமான அன்பை உணர அறிவு வளர்ச்சி பெறவேண்டும். திட்பத்தை அறியும் அறிவு முதலில் இருக்கிறது. வளர வளர நுட்பத்தை

அறியும் ஆற்றல் வருகிறது. இது பருவத்தால் அமையும் வேறுபாடு.

மனிதர்களுக்குள்ளே அறிவில் வேறுபாடு இருக்கிறது. ஒரே பிராயம் உடையவர்கள் ஒரே மாதிரி அறிவுடையவர்களாக இருப்பதில்லை. சிலர் சிறிய பருவத்திலேயே பிறர் வியக்கும் அறிவாற்றல் உடையவர்களாக விளங்குகிறார்கள். சிலரோ மந்த புத்தி உடையவர்களாக இருக்கிறார்கள். பிறவிதோறும் அறிவு, விளக்கம் பெற்று வரும். முன் பிறவியில் அறிவு விளக்கம் பெற்றவர்கள் இந்தப் பிறவியில் இளமை யிலேயே பேரறிவுடையவர்களாக இருக்கிறார்கள்.

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து"

என்ற திருக்குறள் பிறவிதோறும் அறிவு தொடர்ந்து வருவதைத் தெரிவிக்கிறது.

விலங்குகளைவிட அறிவிற் சிறந்தவன் மனிதன். மனிதர்களுள் ஞானிகள் சிறந்த அறிவுடையவர்கள். மனிதர்களைவிடத் தேவர்கள் மிக்க அறிவுடையவர்கள். அவர்களைப்



புலவர் என்று சொல்வார்கள். அதற்கு மிக்க அறிவுடையவர்கள் என்பது பொருள்.

இவ்வாறு அறிவின் தரம் பலபடியாக இருந்தாலும் அறிவின் உச்ச நிலையை அடைந்தவர் யாரும் இல்லை; முழுமையான அறிவை உடையவர் மனிதருள் யாரும் இல்லை. மனிதரைக் கிஞ் சிஜ்ஞர் என்று சொல்வது வழக்கம்; சிற்றறிவுடையவர் என்று பொருள்.

பஞ்சபூதங்களை அடக்கி ஆண்டு, வானத்தில் பறக்கவும் கடலில் மூழ்கிச் செல்லவும், சந்திர மண்டல்த்துக்குச் செல்லவும் விஞ் ஞானம் வழிகாட்டியிருக்கிறது. எத்தனையோ அற்புதமான சாதனைகளை விஞ்ஞானிகள் சாதித்து வருகிறார்கள். ஆண்டுக்கு ஆண்டு இந்தச் சாதனைகள் பெருகி வருகின்றன. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு காணாத விஞ்ஞான அதிசயங்களைள இப்போது கண்டு வியக்கிறோம். மனிதனால் முடியாதகாரியமே இல்லை என்றும் சொல்லும் அளவுக்கு விஞ்ஞானம் வளர்ந்து வருகிறது.

எவ்வளவுதான் அவன் சாதித்தாலும் அவன் சிற்றறிவுடையவன்தான். அவன் அறியாதவைகளே அதிகம்.

“கற்றது கைம்மண் அளவு கல்லாதது உலக அளவு என்று உற்ற கலைமடத்தை ஓதுகிறாள்”

என்பது விஞ்ஞானிகளுக்கும் பொருந்தும். சந்திரமண்டலத்துக்குப் போய் அங்குள்ளவற்றைத் தெரிந்து கொண்டாலும், மற்றக் கிரகங்களை இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. எல்லாக் கிரகங்களையும் அறிந்து விட்டாலும் சூரிய மண்டலத்துக்குச் சென்று கால் வைப்பது எளிதென்று சொல்ல இயலாது. அதன் பக்கத்திலேகூடச் செல்லமுடியாது. அந்த அற்புதமும் நடந்துவிட்டால் நட்சத்திரங்களை அளந்தறிய முடியாத நிலையில்தான் இருப்பான். எல்லாவற்றையும் அறிந்து கொள்ளும் நிலை என்றும் மனிதனுக்கு வரப் போவதில்லை. மனிதன் என்ன? தேவர்களுக்கும் கூடத்தெரியாது.

அப்படியானால் எல்லாவற்றையும் அறிந்தவர் யாரும் இல்லையா? ஒருவன் இருக்கிறான், அவன்தான் இறைவன். அவனே சர்வஜ்ஞன், முற்றறிவுடையவன்; பரிபூரண அறிவே மயமானவன். சச்சிதானந்தம் என்பதில் சத், சித், ஆனந்தம் என்ற மூன்று சொற்கள் அடங்கியுள்ளன. அவற்றுள் இடையிலுள்ள, ‘சித்’ என்பது இந்த முற்றறிவைக் குறிக்கிறது. இறைவனே முற்றறிவுடையவன்; முழுமையும் அறிந்தவன்.

ஞான பரிபூரணனாகிய அவனை எண்ணிப் பார்க்கிறார் காரைக்கால் அம்மையார். எல்லாவற்றையும் அறிந்தவன்

அவனே.

**அறிவானும் தானே.**

எல்லாவற்றையும் அறிந்தவனாகிய அவனே யாவருக்கும் அறிவிக்கிறான். படித்தவன் ஒருவன் கல்லாதவனுக்குத் தான் அறிந்ததைக் கற்றுக் கொடுக்கிறான். அறிந்தவன் அறியாதவனுக்கு அறிவிக்கிறான். இப்படி அறிவிக்கிறவன், வேறு ஒருவரிடம் அறிந்துகொண்டவன். அவனும் தன் குருவின் மூலம் அறிந்து கொண்டிருக்கிறான். இப்படியே ஆராய்ச்சி பண்ணிக்கொண்டு போனால் முதலில் அறிவித்தவன் இறைவன் என்று முடிவாகும். அவன் அறிவிக்க அறிந்தவர்கள் தாம் பெற்ற அறிவை வழிவழியே அறிவித்து வருகிறார்கள். எல்லாருக்கும் அறிவு பரவுவதற்கு மூல புருஷனாக அறிவித்தவன் இறைவனே.

அது மட்டுமா? சிறிய ஆசிரியனிடம் சில ஐயங்களைத் தெரிந்து கொள்ளலாம். அந்த ஆசிரியனால் விளக்கம் பெறாத சந்தேகங்களை அவனைவிடப் பெரிய ஆசிரியனிடம் தெளியலாம். அந்தப் பெரிய ஆசிரியனுக்கும் விளங்காத இடங்கள் இருக்கும். அவற்றை இன்னும் பெரிய ஆசிரியனிடம் அணுகித் தெரிந்து கொள்ளலாம். இப்படி மேலே மேலே போனால் யாவராலும் தெரிவிக்க முடியாத ஐயங்கள் எஞ்சி நிற்கும். அவற்றை இறைவன்தான் தெரிவிக்க முடியும்; அறிவிக்க இயலும். திருமுருகாற்றுப்படை முருகனுடைய ஆறு திருமுகங்களின் செயல்களைச் சொல்லும் போது இந்தக் கருத்தைச் சொல்கிறது.

“ஒருமுகம்
எஞ்சிய பொருளை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக்
கும்மே.”

ஆகவே முதலில் அறிவிப்பவனும், எல்லாம் தெரிந்ததும் தெரியாததை இறுதியில் அறிவிப்பவனும் இறைவனே.

**“அறிவிப்பான் தானே.”**

“தானே அறியும் தன்மை பசுவுக்கு இல்லை; பதியாகிய இறைவன் அறிவித்தால்தான் பசு அறிய முடியும். யாரும் அறிவிக்காமல் இயல்பாகவே அறிபவன் இறைவன். அறி

வித்தால் அறிவது ஆன்மா என்ற கருத்தையும் இது தெரிவிக்கிறது.

அறிவை ஞானமென்றும், அறியும் பொருளை ஞேயம் என்றும், அறிபவளை ஞாதா என்றும் கூறுவர். இந்த மூன்றயும் 'திரிபுடி' என்றும்,'முப்புடி' என்றும் வழங்குவர். எல்லாவற்றையும் அறியும் ஆண்டவன் எல்லா உயிர்களுக்கும் அறிவிப்பானாக, காட்டுபவனாக இருக்கிறான்.

ஜடம் அறியாது; பசுவும் இயல்பாக அறியாது. ஜடம் அறி வித்தாலும் அறியாது; பசு அறி வித்தால் அறியும். அறிவற்குரிய கருவியாகிய அறிவு, பசுவாகிய ஆன்மாவிடம் இருக்கிறது. அறிவு நுட்பமானது. நுட்பமான யாவும் இறைவன் மயம். ஆகவே அறிவும் அவன்தான். அறிவாகிய கருவியாக இருந்து அறிகின்றவனும் அவன்தான். உயிர் அறிவைப் பெறும்போது அதனிடம் தெய்வத்தின் அம்சம் உண்டாகிவிடுகிறது. அவன் பேரறிவுடையனாகும்போது அந்த அறிவே இறைவனாகிறது. அதைக் கருவியாகக் கொண்டு அறிவாலும் இறைவனாகி விடுகிறான். மாணிக்கவாசகர் அறிவாற் சிவன் என்பது திண்ணம் என்று எழுதுவார் சிவஞான முனிவர். அமமையார் இதைச் சொல்கிறார்.

## அறிவாய் அறிகின்றான்தானே

அறிவு என்பது ஏதேனும் ஒன்றை அறிவது. அறியப்படும் பொருள் ஒன்று இருக்க வேண்டும். அறிபவன், அறிவதற்குரிய கருவியாகிய அறிவு இரண்டும் அவனே என்று சொன்ன காரைக்காலம்மையார் அடுத்தபடி மூன்றாவதாக உள்ள அறியப்படும் பொருளும் அவனே என்கிறார்.

## அறிகின்ற மெய்ப்பொருளுந்தானே.

நாம் காணுகின்ற நிலையாத பொருள்களுக்கப்பால் மெய்யான பொருள் ஒன்று உண்டு. அதனை மெய்ப்பொருள், செம்பொருள் என்பார்கள். அதுவே பரம்பொருள், இறைவன்; மெய்யறிவாக நிற்பவன். அதனாற் காணும் மெய்ப் பொருளாகவும் அவன் இருக்கிறான்.

அப்படியானால் சில காலம் தோற்றி மறையும் பொய்ப்பொருள்கள் அவனிலும் வேறா?

ஐம்பெரும் பூதங்களாக விரிந்தது பிரபஞ்சம். அவை: நிலையாதவை. நம் கண்ணுக்கு அவைகளே

தோற்றம் அளிக்கின்றன. இந்தத் தோற்றங்கள் எல்லாம் அவன்தான். கடலில் அலை தோன்றுகிறது. கடலிலிருந்து கழி பிரிந்து நிற்கிறது. அலை என்றும் கழி என்றும் தோன்றினாலும் எல்லாம், கடல் தான். அவ்வாறே, பிரபஞ்சத்தில் வெவ்வேறு வடிவில் தோன்றுகின்றவனும் இறைவன்தான்.

சிவபெருமானுக்கு, அட்டமூர்த்தி என்று ஒரு பெயர் உண்டு; எட்டு வடிவுடையவன் என்பது பொருள். நிலம், நீர், தீ, வளி, வெளி என்ற ஐம்பெரும் பூதங்களும், திங்களும், ஞாயிறும், உயிரும் ஆகிய எட்டும் அவன் வடிவங்கள்.

“இருநிலனாய்த் தீயாகி நீரும் ஆகி

இயமான னாய்எரியும் காற்றும் ஆகி

அருநிலைய திங்களாய் ஞாயி றாகி

ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகி”

என்று பாடுவார் திருநாவுக்கரசர். எல்லாமே இறைவன்தான்.

விரிசுடர்பார் ஆகாசம்

அப்பொருளும் தானே அவன்

என்று முடிக்கிறார் அம்மையார்.

‘எல்லாவற்றையும் அறிபவன் அவன் என்று நுட்பமான பொருளைச் சொல்லி, ‘நமக்கு அறிவிக்கிறவனும், நம்முள் அறிவாய் நிற்பவனும், நாமாக இருந்து அறிபவனும்‘ என்று நம்முடன் தொடர்புடையவனாகச் சொல்லி,’ மெய்ப் பொருளும் பொய்ப் பொருளுமாக இருப்பவன்’ என்று எல்லாம் அவன் தான் என்பதை இறுதியாகச் சொல்லி முடிக்கிறார்.

அறிவானும் தானே அறிவிப்பான் தானே;

அறிவாய் அறிகின்றான் தானே;□ அறிகின்ற

மெய்ப்பொருளும் தானே ; விரிசுடர்பார் ஆகாசம்

அப்பொருளும் தானே அவன்.

இறைவனே நுட்பப் பொருள்களாகவும் திட்பப் பொருளாகவும் இருக்கிறான் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் இருபதாவது பாடல்.

(தொடரும்)

# திருப்பாற்கடலை வரவழைத்த திருமூலநாதர்



தேனம்மை இலக்குமணன்,
காரைக்குடி

திருப்பாற்கடல் என்றால் திருமால் பள்ளி கொண்டிருக்கும் இடம்தானே, அது எப்படி பூமிக்கு வந்தது அதுவும் அதை வரவழைத்தவர் திருமூலநாதர் என்றால் சிவபெருமான் ஆயிற்றே என்று எண்ணலாம். ஆனால் பூமியில் பசியோடு அழுத ஒரு பாலகனுக்காகத் திருமூலநாதர் திருப்பாற்கடலை வரவழைத்தார். அது எங்கே எனக் காண்போம்.

முன்னொரு காலத்தில் மத்யந்தினர் என்றோர் முனிவர் இருந்தார். அவருடைய குமாரன் பெயர் மாத்யந்தினர். தந்தையான மத்யந்தினர் தனது மகனுக்கு நால் வேதங்களையும் ஆறு சாத்திரங்களையும் பயிற்றுவித்தார். அதன் பின் ஆத்ம ஞானம் பெறுவதற்குத் தில்லைவனத்தை அடைந்து சிவபெருமானைப் பூசிக்கும்படிக் கூறினார்.

தந்தையின் சொற்படி மாத்யந்தினரும் அவ்வாறே தில்லைவனத்தைத் தேடிச் சென்றார். பலகாடுகள், நாடுகள் கடந்தன. பலரிடமும் கேட்டு ஒருவழியாகத் தில்லைவனத்தை வந்து சேர்ந்தார். இறுதியாக ஒரு தில்லை மரத்தின் கீழ் சுயம்புவாக எழுந்தருளி இருந்த திருமூலநாதரைக் கண்டடைந்தார். அந்த மூர்த்தியின் அருகிலேயே இருந்த சிவகங்கைத் திருக்குளத்தில் நீராடி அனுட்டானம் முடித்தார். சிவனின் திருமுன்பு வந்து பஞ்சாங்க அட்டாங்க வணக்கம் செய்தார்.

சிவபெருமான் மீது தினம் தினம் வெய்யிலும் மழையும் பொழிவதைப் பார்த்த அவர் சிவலிங்கத் திருமேனியின் மேற்புரம் பந்தல் அமைத்தார். ஒரு பர்ணசாலை அமைத்துத் தானும் தங்கி இருந்து தினந்தோறும் பெருமானை அன்போடு பூக்களால் பூசித்து வந்தார்.

பொழுது விடிவதற்கு வெகு நாழிகைக்கு முன்பே எழுந்து நித்யானுஷ்டானங்களை முடித்துப் பூசைக்கு வேண்டிய மலர்களைக்

கொய்து, பழங்களைப் பறித்துக் கொண்டு வந்துவிடுவார் மாத்யந்தினர். அன்றாடம் இருட்டில் பறிக்கச் செல்வதால் சில சமயம் மலர்கள் இருப்பதைக் கண்டுபிடிக்க முடியாது. விடிந்துவிட்டாலோ அவற்றில் உள்ள தேனை வண்டுகள் உண்டுவிடும்.

ஒருநாள் பனி அதிகம் பெய்யவே அவர் மலர் எடுக்கச் செல்ல நேரமாயிற்று. அதற்குள் அவற்றை வண்டுகள் கடித்துவிட்டிருந்தன. எனவே மனவருத்தத்தோடு அவர் இறைவனிடம் முறையிட்டு



நிலத்தில் வீழ்ந்து அழுது புரண்டார். அவர் வருத்தம் கண்ட சிவபெருமான் அசரீரியாக,"ஏனப்பா இவ்வளவு வருத்தப்படுகின்றாய்?" என வினவினார்.

இறைவன் குரலைக் கேட்டுப் புளகாங்கிதமடைந்த மாத்யந்தினர், "ஈசனே விடியலில் விரைந்து சென்று பூசைக்கு நல்ல மலர்களை எடுக்க இயலவில்லை. வண்டுகள் தேனை உண்டுவிடுவதால் அவை பூசைக்கு உரியதாயில்லை. என் செய்வேன்" என்று வருந்திக் கூறினார்.

இவரின் வருத்தத்தைக் கண்டு இரங்கிய இறைவன்." வருந்தாதேயப்பா, உனக்கு மரம் ஏறி வசதியாக புலியினுடைய கை, கால்களைப் போன்ற உறுப்புக்களையும், இருளிலும் நன்கு தெரியும்படியான பார்வையையும் கொடுத்தோம். புலியின் கை கால்களைப் பெற்றதால் இனி உன் பெயர் வியாக்கிரபாதர் என வழங்கப்படும்" என்று அருளினார்.

அன்றிலிருந்து புலிக்கால் முனிவர் எனப்படும் வியாக்கிரபாதர் தன் பூசைகளை மனமகிழ்வுடன் செய்து வந்தார். தன் மகனைத் தில்லை வனத்துக்குப் பார்க்க வந்த அவரது தந்தை மத்யந்தினர் இவ்விவரங்களைக் கேள்வியுற்று மகிழ்ந்தார். திருமணப் பருவத்தில் உள்ள தன் மகனுக்கு வசிஷ்டரின் சகோதரியான ஆத்ரேயியை மணமுடித்து வைத்தார். இத்தம்பதிகளுக்கு உபமன்யு என்றொரு மகன் பிறந்தான்.

தில்லை வனம் காடு என்பதால் அங்கே குழந்தைக்குத் தேவையான பால் வேண்டி ஆத்ரேயி தன் குழந்தை உபமன்யுவுடன் வசிஷ்டரின் இல்லம் வந்தடைந்தாள். அங்கே காமதேனுப் பசுவின் பாலை உண்டு சில காலம் உபமன்யு மகிழ்ச்சியுடன் இருந்தான். ஆனால் வியாக்கிரபாதருக்குத் தன் குழந்தையான உபமன்யுவை விட்டுப் பிரிந்து இருப்பது கடினமாக இருந்ததால் இருவரையும் தில்லை வனம் வரும்படிக் கூறினார்.

இங்கே வந்தபின் பால் கிடைக்காததால் அரிசிக் கஞ்சி வைத்து அதில் இனிப்பைச் சேர்த்து உபமன்யுவிற்கு அருந்தக் கொடுத்தனர். ஆனால் காமதேனுப்

பசுவின் பாலைக் குடித்து வளர்ந்த உபமன்யு அரிசிக் கஞ் சியைக் குடிக்க மறுத்து அழவே வியாக்கிரபாதர் திருமூலநாதரின் சந்நிதிக்குச் சென்று முறையிட்டார்.

“எனக்கு காமதேனுவும் இல்லை, மற்ற செல்வங்களும் இல்லை. என்னுடைய ஒரே செல்வம் நீதானே திருமூலநாதா, நீதான் என் மகனின் துயர் நீக்க, பசி போக்க வேண்டும்” என்று வருந்தி அழுதார். குழந்தையும் தொண்டை வரள அழுதது.

கருணைக் கடலான திருமூலநாதர் உடனே அங்கே தோன்றினார். பாலுக்காகப் பாலன் அழுததைக் கண்ட அவர் உள்ளமும் கரைந்துவிட பாற்கடலையே வரவழைத்தார். வியாக்கிரபாதரை அழைத்து,” பாலுக்காக அழும் பாலகனுக்காகப் பாற்கடலை இங்கே வரவழைத்திருக்கின்றோம். இதைப் பருகவைத்துப் பாலனின் பசியாற்றி மகிழ்ச்சியாக வைத்திரு” என்று கூறி அருளினார்.

இதைக் கண்டு பெருமகிழ்வு கொண்ட வியாக்கிரபாதர் உபமன்யுவை அழைத்துப் பாற்கடலில் இருந்து பாலைப் பருகச் செய்து இன்புற்றார். இன்னும் இன்னும் திருமூலநாதரின் மேல் பேரன்பு கொண்டு பூசித்து மகிழ்ந்தார்.

இறைவனிடம் பாற்கடலை பெற்ற அக்குழந்தை உபமன்யுவும்



அதைக் குடித்து நன்கு வளர்ந்து நால் வேதங்களையும் ஆறு சாத்திரங்களையும் கற்றுத் தேர்ந்தார். அவரிடம் கிருஷ்ண பகவானே சிவதீட்சை பெற்றுப் பிள்ளை வரமும் பெற்றுச் சென்றார் என்றால் திருமூலநாதரின் பெருமையும் அவர் வரவழைத்த திருப்பாற்கடலின் பெருமையும் வியத்தற்கும் வணங்குதற்கும் போற்றுதற்கும் உரியதே.

## சிவாலயங்களின் சிறப்புகள் - 13



**வே.இராமசாமி,** B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

சிவனேச செல்வர்களுக்குப் பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

# நவகைலாயம் பகுதி- 3

*தமிழகத்தில் தாமிரபரணி கரையில் அமைந்துள்ள நவகைலாயம் என்று அழைக்கப்படும்ஒன்பது சிவாலயங்கள் குறித்த கட்டுரையின் தொடர்ச்சி*

### 5.குரு-முறப்பநாடு கைலாசநாதர் கோவில், முறப்பநாடு

**அம்சம்:** வியாழன் (குரு)

**நட்சத்திரம்:** புனர்பூசம், விசாகம், பூரட்டாதி

**மூலவர்:** ஸ்ரீகைலாச நாதர்

**அம்பாள்:** ஸ்ரீசிவகாமி

**திருக்கோவில் விருட்சம்:** பலா மரம்.

**தீர்த்தம்:** தாமிரபரணி.

நவகைலாயங்களில் முறப்பநாடு அருள்மிகு கைலாசநாதர் திருக்கோயில் ஆகும். முறப்பநாடு குருவின் தலமாகும்

திருநெல்வேலியில் இருந்து தூத்துக்குடி செல்லும் சாலையில் 17 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

நவ கைலாயங்களில் ஐந்தாவது தலமான " முறப்ப நாடு " குரு பகவான் ஆட்சி புரியும் தலமாகும்.. நவ கைலாயங்களில் எந்த தலத்திற்க்கும் இல்லாத ஒரு சிறப்பாக, சிவ பெருமானே இங்கு "குரு பகவானாய்" அருள் புரிகிறார். தாமிரபரணி ஆறு, காசியைப் போன்றே, வடக்கில் இருந்து தெற்கு நோக்கி செல்வதால், இவ்விடம் " தட்சிண கங்கை " என்றானது. இங்கு நீராடுவது காசியில் நீராடுவதற்கு நிகர். இத் தலத்தில் ஒரே கல்லிலாலான தசாவதாரச் சிற்பம் ( மஹா விஷ்ணுவின் பத்து அவதாரங்களும் ) ஒன்றுள்ளது. இத்



தனக்கு குதிரை முகத்தோடு பிறந்த பெண்ணின் நிலையைக் கண்டு கவலைக் கொண்டான். பல திருக்கோயில்களுக்குச் சென்று சிவபெருமானை வணங்கி பின்பு இங்கு வந்து தட்சிண கங்கை தீர்த்தக் கட்டத்தில் நீராடவும் குதிரை முகம் நீங்கி மனித முகம் கொண்டு மிக அழகாக தோன்றினாள். இங்குள்ள நந்தி, மன்னன் மகளின் குதிரை முகத்தை தான் ஏற்றுக் கொண்டதால் குதிரை முகத்துடனே காட்சியளிக்கிறது. மன்னன் மகிழ்ந்து சிவபெருமானுக்கு இங்கு கோயில் கட்டினான். வல்லாள மகராஜா இத்திருக்கோயிலை பெரிதாகக் கட்டி பூஜை காரியங்கள் சிறப்பாக நடைபெற நிலபுலன்கள் எழுதி வைத்தான்.

திருவைகுண்டம் அருள்மிகு கைலாசநாதர் திருக்கோயிலில் உள்ள கலியாணகுறடு என்ற மண்டபத்தில் நவகைலாயங்கள் பற்றிய செய்திகளும், ஓவியங்களும் வரையப்பட்டுள்ளது. சேரன்மகாதேவி கோயிலிலும் நவகைலாயம் குறித்த கல்வெட்டுகள்

தலத்தில் உள்ள சபரி தீர்த்தத்தில், தை மாத அமாவாசைகளிலும், மாதாந்திர கடைசி வெள்ளிக் கிழமைகளிலும் நீராடி கைலாச நாதரை வழிபட்டால் வாழ்வில் பேரின்பம் கிட்டும். மூலவர் கைலாசநாதராகவும், அம்பாள் சிவகாமியாகவும் அருள் புரியும் தலமாகும்.

சூரபதுமன் அசுரனின் வழியில் வந்த அசுரன் ஒருவன் முனிவர்களுக்கு செய்த தொல்லையை பொறுக்க முடியாமல் அவர்கள் முறைப்படி நின்று முறையிட்டார்கள். சிவபெருமான் திருவுளம் இரங்கி அவர்களுக்கு அருள் செய்தார். முறைப்படு நாடு முறப்பநாடு எனப் பெயர் பெற்றது என்பது வரலாறாகும்.

சோழ மன்னன் ஒருவன்



உள்ளது. விஜயநகர பேரரசின் தளபதி விட்டலராயன் இத்திருகோயிலுக்கு வந்து வழிபட்டதை விட்டிலாபுரம் கல்வெட்டு கூறுகிறது.

இத்திருத்தலத்தில் சிவபெருமானே தட்சிணாமூர்த்தியாக குருவாக தென்முகக் கடவுளாக வீற்றிருந்து அருள் பாலிக்கிறார். நவகைலாயங்களில் முறப்பநாடு நடு கைலாயமாகும். இத்திருத்தலம் குருவுக்கான தலமாகும். பிருகண்ட முனிவர் பாதம் பட்ட இடமும் காஞ் சனமாலை மோட்சம் பெற்றதும் மார்க்கண்டேயன் பூஜை செய்ததும் இவ்விடமே ஆகும். பைரவர் சன்னதியில் இரண்டு பைரவர்கள் இருக்கின்றனர். நாய் வாகனத்துடன் காட்சி தரும் பைரவர் கால பைரவர் என்றும், வாகனம் இன்றி காட்சி தரும் மற்றொரு பைரவர் வீர பைரவர் என்றும்



அழைக்கின்றனர். தாமிரபரணி நதி இவ்விடத்தில் தெற்கு நோக்கி தட்சிண கங்கையாக செல்வது தனிச் சிறப்பாகும். இங்குள்ள கைலாச நாதர் குரு அம்சமாக இருப்பதால் சுவாமிக்கு மஞ்சள் வஸ்திரம் சாத்தி கொண்டைக்கடலை நைவேத்தியம் செய்யப்படுகிறது.



## திருக்கோவில் சிறப்புக்கள்:

1. வடக்கே உள்ள காசியில் கங்கை நதி வடக்கிலிருந்து தெற்கு நோக்கிப் பாய்வதை போல, இங்கு முறப்பநாட்டில் தாமிரபரணி நதி வடக்கிலிருந்து தெற்கு நோக்கிப் பாய்கிறது. எனவே இந்தத் தீர்த்தகட்டம் "தக்ஷிண கங்கை" என்று சிறப்பித்து அழைக்கப்படுகிறது.

2. இங்கு ஒரே சந்நிதிக்குள் இரண்டு பைரவர்கள் காட்சிதருவது சிறப்பம்சம். அதில் ஒருவர் நாய் வாகனத்துடனும், மற்றொருவர் நாய் வாகனம் இல்லாமலும் காட்சித் தருகிறார்கள்.

3. நவகைலாய ஸ்தலங்கள் ஒன்பதில் இந்த முறப்பநாடு கோவில் நடுநாயமாக அமையப்பெற்றுள்ளதால் இதற்கு 'நடு கைலாயம்' என்ற பெயரும் வழங்கப்படுகிறது.

4. ஆடி, புரட்டாசி மற்றும் தை மாத அமாவாசைகளில் இங்குள்ள தாமிரபரணி நதியில் நீராடி முன்னோர்களுக்குத் தர்ப்பணம் கொடுப்பது பித்ரு தோஷத்திலிருந்து நிவர்த்தி பெற செய்யும்.

5. இங்குச் சிவபெருமானே தட்சிணாமூர்த்தியாகத் தென் திசை நோக்கி வீற்றிருந்து அருள்பாலித்து வருவதால், இது ஒரு சிறந்த குரு பரிகார ஸ்தலமாக விளங்குகிறது.

## முக்கிய விழாக்கள்:

மாசி மாத சிவராத்திரி, மாதாந்திர பிரதோஷ வழிபாடுகள், மார்கழி திருவாதிரை, கார்த்திகை சோமவார வழிபாடு ஆகியவை நடைபெறுகிறது. இது தவிர இங்குக் குரு பெயர்ச்சி விழா வெகுசிறப்பாக நடைபெறும்.

நடைதிறப்பு காலை 7.00 மணி முதல் 10.00 மணி வரை, மாலை 5.00 மணி முதல் இரவு 7.00 மணி வரை..



## 6. சனி- ஸ்ரீவைகுண்டம் கைலாசநாதர் கோவில், ஸ்ரீவைகுண்டம்

**நட்சத்திரம்:** பூசம், அனுஷம், உத்திரட்டாதி

**மூலவர்:** ஸ்ரீ கைலாச நாதர்

**அம்பாள்:** ஸ்ரீசிவகாமி

**திருக்கோவில் விருட்சம்:** இலுப்பை மரம்.

**தீர்த்தம்:** தாமிரபரணி.



திருநெல்வேலியில் இருந்து திருச்செந்தூர் செல்லும் சாலையில் முப்பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

நவ கைலாயங்களில் சனீஸ்வர பகவான் ஆட்சி புரியும் ஆறாவது திருத் தலமாகும். இது,. பூத நாதர் மற்றும் நவக்கிரக வழிபாடுகள் சிறப்பு பெற்ற இத் தலம், சனி திசை நடப்பவர்கள் அனைவரும் தவறாமல் வந்து வணங்க வேண்டிய தலமாகும். இத் தல அம்பிகை, சிவகாமி அம்பாளாகவும், இறைவன், சுயம்புவாய் ஸ்ரீ கைலாசநாதராகவும் வீற்றிருக்கின்றனர். ஸ்ரீ வைகுண்டம் நவ திருப்பதிகளில் ஒன்றாகவும், நவ கைலாயங்களில் ஒன்றாகவும் விளங்கும் சிறப்பு பெற்ற திருத் தலமாகும். குமர குருபரர் தன் திருவாய் மொழிந்த தலம் என்ற சிறப்பு பெற்றது. ஆறு கால பூஜையும் மிகச் சிறப்பாக நடைபெறும், சிவ பெருமான் சனி பகவானாய் விளங்கும் இத் திருத் தலத்தில் செய்யப்படும் சனி தோஷ பரிகார வழிபாடுகள், நடைபெறாமல் தடை பட்டுக் கொண்டே வரும் திருமணங்களை இனிதே நிறைவேற்றி தரும். இழந்த செல்வங்களை மீட்டுத் தரும்.

நவதிருப்பதிகளில் ஒன்றான ஸ்ரீ வைகுண்டநாத பெருமாள் திருக்கோவில் இதே ஊரில் அமையப்பெற்றுள்ளது. வைகுண்டத்தில் உறையும் மகா விஷ்ணுவே இங்கு வைகுண்டநாத பெருமாளாகக் காட்சிதருவதால் இந்தத் தலம் பூலோக வைகுண்டம் என்ற சிறப்பைப் பெறுகிறது. அதனால் திருவைகுண்டம் என்ற பெயரை இந்தத் தலம் பெற்றது.

### சுவாமி கைலாசநாதர்:

கிழக்கு நோக்கிய தனி கருவறையில் உரோமச மகரிஷி பிரதிஷ்டை செய்த சுவாமி கைலாசநாதர், லிங்கத் திருமேனியராகக் காட்சித் தருகிறார்.. இவருக்கு விஷேச காலங்களில் கவசம் மற்றும் நாகாபரணம் சாத்தப்பட்டு அலங்காரம் செய்யப்படும்.

### சிவகாமியம்மை:

தெற்கு நோக்கிய தனி கருவறையில் நின்ற கோலத்தில் சிவகாமி அம்மை தனது ஒரு கரத்தில் மலர் ஏந்தியபடியும், மற்றொரு கரத்தைக் கீழே தொங்கவிட்ட படியும் காட்சித்தருகிறாள். அவளின் திருமுகத்தில் கோடி சூரியபிரகாசமும், அவளுடைய புன்னகையில் மூன்றாம் பிறை நிலவும் ஒளிர்வதை காணலாம்.

### பூதநாதர் சிறப்பு:

இந்தக் கோவிலில் உள்ள பூத வாகனம் பரிவார தெய்வமாகவே வணங்கப்படுகிறது. பூதநாதருக்கு வடைமாலை சாற்றி விசேஷ வழிபாடுகள் நடைபெறும். சித்திரை மாதம் நடைபெறும் இந்தக் கோவிலின் திருவிழாவில் பூதநாதருக்கே முதல் மரியாதை செய்யப்படும். இந்த விழாவின் மூன்றாம் நாள் அன்று சுவாமி கைலாசநாதர், பூத நாதர் வாகனத்தில் எழுந்தருளிச் சேவை சாதிப்பார். இந்தப் பூத வாகனம் திருநெல்வேலி அருகே உள்ள செப்பறை நெல்லையப்பர் கோவிலுக்குச் சொந்தமானது என்றும், முன்னர் தாமிரபரணி ஆற்றில் ஏற்பட்ட கடும் வெள்ள பெருக்கினால், செப்பறை பழைய கோவில் சிதிலமடைந்து அங்கிருந்த பொருட்கள் ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டதாகவும், அப்படி அங்கிருந்து ஆற்றில் அடித்துக் கொண்டுவரப்பட்ட பூத வாகனமே இங்குள்ள பூதநாதர் என்று செப்பறை மஹாத்மியம் என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தப் பூத நாதர் திருநெல்வேலி மாவட்டத்தில் பிரசித்தி பெற்ற சங்கிலிபூதத்தாரின் அம்சமாக இங்கு வணங்கப்படுகிறார்.



### திருக்கோவில் அமைப்பு:

திருவைகுண்டம் நகரின் வடகிழக்கு திசையில் அமையப்பெற்றுள்ளது கைலாசநாதர் திருக்கோவில். இங்கு வானளாவிய கோபுரத்திற்கு பதிலாக மொட்டைக் கோபுரம் நம்மை வரவேற்கிறது. அதனைத் தாண்டி உள்ளே சென்றால்



நந்தி, கொடிமரம், பலிபீடம் ஆகியவை அமையப்பெற்றுள்ளன. வெளிப்பிரகாரம் முழுவதும் வில்வம், வேம்பு, தென்னை, வன்னி போன்ற மரங்களும், அரளி, நந்தியாவட்டை, திருநீற்று பச்சிலை போன்ற செடிகளும் வளர்ந்து நந்தவனமாகக் காட்சியளிக்கிறது. உள்ளே கிழக்கு நோக்கிய கருவறையில் கைலாசநாதர் கம்பீரமாக லிங்கத் திருமேனியராகக் காட்சித் தருகிறார். அவரின் கருவறைக்குள் சரவிளக்கு தீபங்கள் சுடர்விட்டு கொண்டிருக்கும். வெளியே தனி கருவறையில் சிவகாமி அம்மை நின்ற கோலத்தில் காட்சித் தருகிறார். உள்பிரகாரத்தில் பரிவார தெய்வங்களாக முறையே அதிகார நந்தி, சூரியன், நால்வர், சுரதேவர், சப்தமாதர்கள், அறுபத்து மூவர், தக்ஷிணாமூர்த்தி, கன்னிமூலை கணபதி, பஞ்ச லிங்கங்கள், வள்ளி தெய்வானை உடனுறை சுப்பிரமணியர், மஹாலக்ஷ்மி, துர்கை, சண்டிகேஸ்வரர், சனீஸ்வரர், சந்திரன், பைரவர், பூதநாதர், சிவகாமி அம்மை உடனுறை சபாபதி ஆகியோர் காட்சி தருகிறார்கள்.

## திருக்கோவில் சிறப்புக்கள்:

1. சந்தன சபாபதி மண்டபத்தில் கருணை பொழியும் வகையில் கண்ணைக் கவரும் பல சிற்பங்கள் உள்ளன.

2. கோவிலின் உட்பிரகாரத்தில் உள்ள திருக்கல்யாண மண்டபத்தின் மேற்கூரையில் நவ கைலாயங்களைப் பற்றிய செய்திகளும், படங்களும் மூலிகைகளைக் கொண்டு



படமாக வரைந்து வைக்கப்பட்டுள்ளது.

3. இங்கு யானை மற்றும் யாளியின் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. யாளியின் வாய்க்குள் உருளும் வகையில் உருளை வடிவிலான கல் பந்து ஒன்று உள்ளது. இந்தப் பந்தை நம் கைகளால் உருட்ட முடியும், ஆனால் அதன் வாயில் இருந்து வெளியே எடுக்க முடியாது. இது பண்டைய காலத்து சிற்பக்க கலைஞர்களின் புத்திக்கூர்மைக்கு சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

4. நந்தவனத்திற்கு செல்லும் முன் மண்டபத்தில் ஒரு தூணில் உரோமச முனிவரின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது.

5. குமர குருபரர் அவதரித்த புண்ணிய பூமி

6. இவர் நவகைலாய தலங்களிலேயே சற்றே பெரிய திருமேனி என்று கூறப்படுகிறது

7. இங்கு நவதிருப்பதி தலங்களுள் ஒன்றான வைகுண்டநாதர் திருக்கோவிலும், நவகைலாய தலங்களுள் ஒன்றான கைலாசநாதர் திருக்கோவிலும் ஒரே ஊரில் அமையப்பெற்றுள்ளது.

**முக்கிய விழாக்கள்:**

சித்திரை மாதம் பத்து நாட்கள் திருவிழா, ஐப்பசி திருக்கல்யாண திருவிழா, மார்கழி திருவாதிரை திருவிழா, மாசி மாதம் சிவராத்திரி போன்ற வருடாந்திர விழாக்களும், பிரதோஷம், பௌர்ணமி பூஜை போன்ற மாதாந்திர வழிபாடுகளும் விமரிசையாக நடைபெறும்.

நடைதிறப்பு காலை 7.00 மணி முதல் 10.30 மணி வரை, மாலை 5.00 மணி முதல் இரவு 8.30 மணி வரை.

(தொடரும்)

## திவ்ய தேச கவிதை தரிசனம்

# சீர்காழி என்ற காழிச்சீராம விண்ணகரம்



அழ. மணிமேகலை,
காரைக்குடி

108 திவ்யதேசங்களுள் இ ரு ப த் தி யெ ட் டா வ து திவ்யதேசம், சீர்காழி என்ற காழிச்சீராம விண்ணகரம். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது இருபத்தியெட்டாவது திவ்யதேசமாகும். இத்தலம் சீர்காழியில் அமைந்துள்ளது. மயிலாடுதுறையில் இருந்து சிதம்பரம் செல்லும் பேருந்துகள் இவ்வூர் வழியே செல்லும்.

108 திவ்ய தேசங்களில் உள்ள ஆறு விண்ணகரங்களில் இத்தலமும் ஒன்று. ஏனைய ஐந்து விண்ணகரங்கள் பின்வருமாறு

1.திருவிண்ணகரம் – ஒப்பிலியப்பன் கோவில்

2.அரிமேய விண்ணகரம் – திருநாங்கூர் குடமாடுகூத்தன் கோவில்

3.வைகுந்த விண்ணகரம் – திருநாங்கூர் வைகுந்தநாதன் கோவில்

4.நந்திபுரம் விண்ணகரம் – கும்பகோணம் அருகிலுள்ள நாதன் கோவில்

5.பரமேச்சுர விண்ணகரம் – பரமபதநாதன் கோவில்,காஞ்சிபுரம்

விண்ணகரம் என்பது பரமபதத்திற்கு சமமான தலம். விஷ்ணுவின் கிரகமே விண்ணகரம் ஆயிற்று. இத்தலம் சீர்காழி




மூலவர் திரிவிக்கிரம நாராயணப் பெருமாள், வாமன அவதாரத்தில், மகாபலி மன்னனிடம் மூன்றடி நிலம் கேட்டு, தானம் வாங்கியபின் விண்ணுக்கும் மண்ணுக்குமாக விஸ்வரூபம் எடுத்து, முதலடியில் ஒட்டுமொத்த பூமியையும் அளந்துவிட்டு,

யிலுள்ள இராம விண்ணகரம். அதனால்தான், இத்தலம் காழிச்சீர் இராம விண்ணகரம் ஆயிற்று. இத்தலத்திற்குப் பாடலிகவனம் என்றொரு பெயருண்டு.

இங்குள்ள

மூலவர் – திரிவிக்கிரமன்
உற்சவர் – தாடாளன்
தாயார் – லோகநாயகி
உற்சவத்தாயார் – மட்டவிழ்குழலி
தீர்த்தம் – சங்குதீர்த்தம், சக்கரதீர்த்தம்
விமானம் – புஷ்கலா வர்த்தக விமானம்
தலவிருட்சம் – பலாமரம்
கோலம் – கிழக்கு நோக்கிய நின்ற திருக்கோலம்

இரண்டாவது அடியில் மேலுலகங்கள் அனைத்தையும் அளந்து கொண்டிருக்கும் கோலம். இடதுகால் ஆகாயத்தில் சஞ்சரிக்கும். ஆதலால், இடது காலை தலைக்கு மேலே தூக்கிக் கொண்டு, வலக்கையை தானம்பெற்ற அமைப்பிலும், இடது கையை





மீதி ஒரு அடி எங்கே? எனக் கேட்டு ஒரு விரலை மட்டும் தூக்கியபடி திரிவிக்கிரமர் காட்சி தருகிறார்.

மூலவர் திரிவிக்கிரமர் பூமியில் ஊன்றிய வலது பாதத்திற்கு முன்னே, உற்சவர் தாடாளர் நிற்கின்றார். வைகுண்ட ஏகாதசிக்கு மட்டும் அந்தப்பக்கம் நகர்ந்து நிற்பாராம். அப்பொழுது மட்டும்தான் நாம் மூலவரின் வலது பாதத்தைச் சேவிக்க முடியும்.

பெருமாள் தன் மார்பில் மகாலெஷ்மியைத் தாங்கியிருப்பார். ஆனால், இத்தலத்தில் லோகநாயகித் தாயார் தனது மார்பில், திரிவிக்கிரமனைத் தாங்கியபடி காட்சி தருகிறார். ஒரு கால் ஊன்றி, மற்றொரு காலைத் தூக்கி நின்று கொண்டிருப்பதால், சுவாமியின் பாதம் வலித்து விடாமல் இருப்பதற்காக, அவரை இத்தலத்தில் லோகநாயகித் தாயார் தாங்குகிறார்.

திருக்கோவலூரிலும் எம்பெருமான் திரிவிக்கிரமனாக உலகளந்த காட்சி தருகிறார். ஆனால், அங்கு வலது திருவடி தூக்கியபடி இருக்கும். இத்தலத்திலோ பெருமான் இடது பாதம் தூக்கி, பஞ்சாயுதங்களுடன் காட்சி தருகிறார்.

ஒருமுறை ஆற்காடு நவாப்பின் வீரர்கள், தாடாளப் பெருமானைத் தூக்கிச் சென்று, நவாப்பின் மகளிடம் கொடுத்து விட்டனர். அச்சிறுமியும் எம்பெருமானைப் படுக்கையறையிலும், உப்பரிகையிலும் வைத்து விளையாடிக் கொண்டிருந்தாள். சீர்காழியில் உள்ள சிதம்பரம் படையாச்சி என்பவர் கனவில் வந்த எம்பெருமான், தன்னை மீட்டுக் கொண்டு வருமாறு கூறுகிறார். அவரும் கோட்டை மதிற்சுவரை

அடைந்து, எம்பெருமானின் மொழிகளுக்கேற்ப,

தாடாளா வா தாடாளா வா
வெண்ணெய் உண்ட தாடாளா
வா

தாடாளா வா தாடாளா வா
தவிட்டுப் பானைத் தாடாளா வா

என்று பாட, உப்பரிகையில் நவாபின் மகள் கையிலிருந்த எம்பெருமான் சரேலென்று சாளரத்தின் வழியாகப் பாய்ந்து, இவரின் கரத்தில் சேர்ந்தார். அதனால், இன்றும் அவர் மரபினருக்கு இங்கு ஏழாம் நாள் உற்சவத்தில் மரியாதை உண்டு.

காப்பியக் கவிஞர் நா.மீனவனார், காழிச்சீராம் விண்ணகரம் என்ற இத்திருத்தலம் குறித்து எழுதிய ஐந்து பாடல்களும், அவற்றின் விளக்கங்களும் பின்வருமாறு

1. பிரம்மன் படைப்புத் தொழிலில் ஈடுபட்டிருந்ததால், பல யுகங்கள் வாழும்படி சாகாவரம் பெற்றிருந்தார். அதனால் பிரம்மனுக்குத் தன் ஆயுளைப் பற்றிக் கர்வம் இருந்தது. உரோமச முனிவர் என்பவருக்கு உடல் முழுவதும் முடியுண்டு. அவரைக் கேலி செய்யும் நோக்கில், “உன் உரோமம் எனது ஆயுள்” என்றார். அதை நிஜமாக்க வேண்டுமென்று முடிவு செய்த உரோமசர், மஹாவிஷ்ணுவைக் குறித்துக் கடுந்தவம் இருக்கலானார். முனிவரின் தவத்தை மெச்சிய விஷ்ணு, உரோமச முனிவரின் ஒரு உரோமம் உதிர்ந்தால், பிரம்மனின் ஆயுளில் ஒருவருடம் குறையும் என்று கூறி, இன்னும் யாது வேண்டுமெனக் கேட்டார். முனிவரும், எம்பெருமான் எடுத்த திரிவிக்கிரம அவதாரத்தை இவ்விடத்தே எனக்குக் காட்டியருள வேண்டுமென்று வேண்ட, அவ்வண்ணமே எம்பெருமான் தனது இடதுகாலைத் தூக்கி, திரிவிக்கிரமக் கோலத்தில் நின்றருளினார். தன் தாள்களால் உலகம் அளந்தமையால், இப்பெருமாளுக்குத் தாளாளன் என்பதே திருநாமமாயிற்று. அது மருவித் தாடாளன் ஆயிற்று. நான்முகனும் கர்வம் அழியப் பெற்றார்.அவ்வாறு தனிக்கோலம் காட்டியவன், தாயார் லோகநாயகியின் புன்னகையில் காதல்கொண்டு, அவளின் இதயத்தில் தடம்பதித்தவன். அவனுடைய பாதங்களில் பணிந்திடுவோம்.

முன்னாளில் உரோமச முனிவனார்
விழைந்தபடி

தன்னுடைய விக்கிரமத்

தனிக்கோலம் காட்டியவன்

பொன்லோக நாயகியின் புன்னகையில் மால்கொண்டு

தன்னிதயம் வைத்ததனித் தாடாளன் தாள்பணிமின்.

2. உற்சவத் தாயார் மட்டவிழ் குழலியோடும், லோகநாயகித் தாயாரோடும் இத்தலத்தில் பெருமான் வீற்றிருந்து மகிழ்ந்து கொண்டிருக்கின்றார். ருக்மணி திருமகளின் அம்சம். சத்யபாமா நிலமகளின் அம்சம். நப்பின்னை நீளாதேவியின் அம்சம். நப்பின்னை, கண்ணனை வளர்க்கும் பாக்கியம் பெற்ற யசோதையின் உடன்பிறந்த கும்பகனின் மகளாகத் தோன்றினாள். அதாவது, கண்ணனுக்கு மாமன் மகள். மிதி லையின் அரசன் கும்பகனின் நிபந்தனைக்கேற்ப, ஏழு எருதுகளை அடக்கி நப்பின்னையின் தோள் அணைந்து கரம் பற்றியவன், எம்பெருமான். பகைவர்களை விரட்டியடித்தவன். ஒளி வண்ண மேனியைக் கொண்டவன். “ஓம் நமோ நாராயணாய” என்ற எட்டெழுத்து மந்திரத்துக்கு உரியவன் வீற்றிருக்கும் திருத்தலமே சீராம விண்ணகரம்.

மட்டவிழும் குழலி மகிழ்லோக நாயகியைத் தொட்டுத் தினம்மகிழ்வான் நப்பின்னை தோளணைவான்

ஒட்டாரை ஓட்டியவன் ஒளிவண்ண மேனியினான்

எட்டெழுத்தான் இருப்பதுவோ சீராம விண்ணகரம்.

3. தேன் நிறைந்த தாமரைப்பூ இருக்கின்ற வயல்கள், அதன்கண் பாய்கின்ற மீன்கள் என அழகு திகழ இருக்கும் சீர்காழி என்ற பதியில் அமர்ந்திருக்கும் மாயவனை, மீன் விழிகளைக் கொண்ட திருமகளின் நாயகனை, மண்ணோடும் விண்ணையும் அளந்த பெருமானை வந்து வணங்கி வாழ்வு பெற வேண்டும்.

தேன்விளங்கு கமலங்கள் திகழ்வயற்கண் பாய்கயல்கள்

தான்திகழும் சீர்காழி தனிலமர்ந்த மாயவனை

மீன்விழியாள் திருமகளின் மேலான நாயகனை

வானளந்த பெருமானை வாழ்வுபெற வணங்குமினே.

4. அன்று அர்ஜுனனுக்குத் தேரோட்டியாக மனம்மகிழ்ந்து தேரைச் செலுத்தியவன், சடகோபனாகிய நம்மாழ்வாருக்கு

திருவருளைத் தந்தவன், ஒலி எழுப்பும் சங்குகள் நிறைந்த கடலில் உறைபவன், அரக்கர்களுக்கு எமனானவன், துளவ மாலையை அணிந்திருப்பவன் சீர்காழியில் தலைவனாய் வீற்றிருக்கிறான். அவனைப் போற்றுவோம்.

பார்த்தன் உளமகிழப் பண்டுதேர் செலுத்தியவன்

தீர்த்தன் சடகோபன் திருவருளைப் பெறவைத்தோன்

ஆர்த்தவளைக் கடலுறைவான் அரக்கருக்கும் கூற்றானோன்

தார்த்துளவச் சீர்காழித் தலைவனைநீர் போற்றுமினே.

5. திருமாலை, கேசவனை, மண்ணளந்த மாதவனை, நீலமலர் நிறம் கொண்டவனை, சக்கரத்தை ஆயுதமாகக் கொண்டவனை, கோலவிழி கொண்ட திருமகளை மணந்தவனை, காலமெலாம் கடந்து நிற்பவைனைக் காதலால் வணங்குவோம்.

மாலரிநற் கேசவனை மண்ணளந்த மாதவனை

நீலமலர் நிறத்தானை நீடாழிப் படையானை

கோலவிழித் திருமகளின் கூட்டுறவில் மகிழ்ந்தானைக்

காலமெலாம் கடந்தானைக் காதலால் வணங்குமினே.

திருமங்கையாழ்வார் வேல் பெற்ற தலம் இத்திருத்தலம். ஒரு சமயம், இத்தலம் அழிவுற்றபோது, உற்சவப் பொருமாளை மட்டும் ஒரு மூதாட்டி தவிட்டுப்பானையில் காத்து வந்தாள். தினமும் திருவாராதனம் செய்து மீண்டும் தவிட்டுப் பானைக்குள் வைத்துவிடுவாள். எனவே எம்பெருமானுக்கு “தவிட்டுப் பானைத் தாடாளன்” என்ற திருநாமமும் உண்டு.

அம்பிகையிடம் ஞானப்பால் அருந்திய திருஞானசம்பந்தர், இந்த ஊர்க்காரர் என்பதால், இங்கேயே இருந்து சிவத்தொண்டு செய்து கொண்டு இருந்தார். அப்பொழுது, திருமங்கையாழ்வார் வடதேச யாத்திரை சென்று, இவ்வூருக்கு வந்த சமயம், அவரின் சீடர்கள் திருமங்கையின் விருதுப்பெயர்களை உரக்கக் கூவிக் கொண்டு வந்தனர். அப்போது, அங்கு நின்று கொண்டிருந்த சிவனடியார்கள், ஞானசம்பந்தர் இங்கு எழுந்தருளியிருப்பதால், நீங்கள் யாரும் உங்கள் தலைவரின் விருதுப் பெயர்களை இங்கு கூவிக்கொண்டு செல்லல் கூடாது

என்று தடுத்தனர். இவர்கள் மறுக்க வாதம் வளர்ந்தது. ஒரு கட்டத்தில், இதை ஞானசம்பந்தரும், திருமங்கையாருமே பேசித் தீர்த்துக் கொள்வதென முடிவு செய்யப்பட்டது.



திருமங்கையாரின் கனவில் வந்த எம்பெருமான், பாட்டி வீட்டுத் தவிட்டுப் பானையில் இருக்கும் தாடாளனைக் கும்பிட்டு வாதத்தில் வெற்றி பெறுமாறு கூறுகிறார். அதன்படியே திருமங்கையாரும் பாட்டி வீட்டுக்குச் சென்று தவிட்டுப் பானைக்குள் இருந்த தாடாளனைக் கும்பிட்டுவிட்டு, அவரையும் கையுடன் எடுத்துக்கொண்டு போட்டிக்குக் கிளம்புகின்றார்.

திருமங்கையை நோக்கிய ஞானசம்பந்தர், உம்மைப் பெரிய வரகவியென்று விருது ஓதிச் செல்கின்றார்களே! அப்படியானால், உம்மால் ஒரு குறள் சொல்ல முடியுமா எனக் கேட்டார். உடனே திருமங்கையாழ்வார், எம்பெருமான் குறளாய், அதாவது குள்ள வாமனனாய் அவதாரம் எடுத்ததை மனதில் நிறுத்தி, "ஒரு குறளாய்" என்ற வார்த்தையையே கவியின் முதலடியாகக் கொண்டு, ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு என்னும் எண்வரிசைகளில் தொடர்ந்து, எம்பெருமானின் பத்து அவதாரங்களையும் வைத்து பத்துப் பாசுரங்களைப் பாடுகிறார். மகிழ்ந்த ஞானசம்பந்தர், அவரது வேலை திருமங்கையாழ்வாருக்குப்

பரிசாக அளிக்கின்றார். பின் திருமங்கையாழ்வாரின் காலில் வீரக்கழலாகிய தண்டையையும் அணிவிக்கிறார். பின் திருமங்கையாழ்வார், கையில் சுமந்து கொண்டு வந்து உற்சவரை அங்கேயே பிரதிஷ்டை செய்து, உற்சவர், தாயாருடன் உரோமச முனிவரையும் தன் விருதுப் பெயர்களையும் சேர்த்து மங்களாசாசனம் செய்தார். அப்பத்துப் பாடல்களில் ஒன்றான முதற்பாடலும் அதன் பொருளும் பின்வருமாறு.

ஒப்பற்ற வாமனனாகி, மகாபலி யிடம் சென்று மூன்றடி மண் யாசித்துப் பெற்று, பூமியையும் விண்ணையும் ஈரடியால் அளந்து கொண்டு, மூன்றாவது அடிக்கு இடம் கேட்டு, இயலாத மகாபலியைச் சிறைவைத்துக் காட்டிய பெருமையுள்ள எம்பெருமான் திருப்பாதங்களைச் சரணடையுங்கள்! அரிய வேதங்களின் நான்கு பிரிவுகளும், ஐந்து வேள்விகளும், வியாக்கரணம் முதலான ஆறு அங்கங்களும், ஏழு ஸ்வரங்களும், வீதி நிறைந்த விழாக்களின் பெருமைகளுமாகச் சிறப்புடைய காழி என்னும் திருத்தலத்திலுள்ள சீராம விண்ணகரம் என்னும் திருப்பதியைச் சென்றடைவீர்.

ஒருகுறளாய் இருநிலம் மூவடி மண்வேண்டி

உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி ஒன்றும்

தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த

தாடாளன் தாளணைவீர்! தக்க கீர்த்தி

அருமறையின் திரள்நான்கும் வேள்வி ஐந்தும்

அங்கங்கள் அவையாறும் இசைகள் ஏழும்

தெருவில்மலி விழாவளமும் சிறக்கும் காழிச்

சீராம விண்ணகரே சேர்மின் நீரே

திவ்யதேச கவிதை தரிசனம் தொடரும்.

# பெரியபுராணக் கதைக் களம்

பகுதி – 11

அன்பர்களே !

தொண்டர்தம் பெருமை அளவிடற்கு அரியது. அவர்களின் அருள் வரலாறு நம்மை நல்வழியில் நடத்தும். திருநெல்லையின் இவ்விதழில் புதுமை இணைப்பாகப் பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அறுபத்து மூன்று அருந்தொண்டர் கதைகள் ஒவ்வொன்றாகக் காதுகளுக்கும், கண்களுக்கும் மனதிற்கும் இன்பம் சேர்க்கும் வகையில் கதைவடிவில் ஒளிபரப்பாகிறது. கேட்டு, உணர்ந்து அனுபவித்து மகிழுங்கள்.



# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

உ

தைப்பூசத் திருநாளை முன்னிட்டு 11.02.2025 அன்று ஸ்ரீ வள்ளி, தெய்வானை உடனுறை அருள்மிகு ஆறுமுகப்பெருமானுக்கு சிறப்பு அபிடேக வழிபாடு நடைபெற்றது.

## தை மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்

| | | | |
|---|---|---|---|
| 16.02.25 | சங்கடஹர சதுர்த்தி | மாலை | விநாயகர் வழிபாடு |
| 20.02.25 | தேய்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 25.02.25 | பிரதோஷம் | | |
| 26.02.25 | மகா சிவராத்திரி | இரவு முழுவதும் | சிறப்பு அபிடேக வழிபாடு |
| 05.03.25 | கார்த்திகை | மாலை | ஸ்ரீ ஆறுமுகர் வழிபாடு |
| 06.03.25 | வளர்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 09.03.25 | வளர்பிறை ஏகாதசி | மாலை | பெருமாள் வழிபாடு |
| 11.03.25 | பிரதோஷம் | | |
| 13.03.25 | பௌர்ணமி | மாலை | சிவகாமி அம்மன் வழிபாடு |

# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

### கேள்வி

நம்முடைய கர்மக்கொள்கை அல்லது வினைக்கொள்கை என்றால், என்ன என்பது குறித்து விளக்கம் தர வேண்டுகிறோம்!

### விளக்கம்

# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள ”கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்” சுமார் 44,000 க்கும் மேற்பட்ட நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.



# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்

Koviloor Andavar Library : Free
archive.org/details/koviloorandavarlibrary
INTERNET ARCHIVE WEB TEXTS VIDEO AUDIO SOFTWARE IMAGES SIGN UP | LOG IN UPLOAD Search
ABOUT BLOG PROJECTS HELP DONATE CONTACT JOBS VOLUNTEER PEOPLE
Koviloor Andavar Library
Koviloor Andavar Library
Share
RSS
Play All
COLLECTION ABOUT
6,360 Results
Search
Search this collection
Search metadata
Search text contents
Advanced Search
Filters
Sort by: Weekly views Title Date published Creator
கம்பராமாயணம்-
மனுநீதி என்னும் மனு
வாஸ்து சாஸ்திரம்
Practicals Of Mantras
ஸ்ரீ கருட புராணம்
TIRUMANTIRAM

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 6360 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 3000 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்கலாம்/ பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்குத் தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

நம் இணைய நூலகம் அமைந்துள்ள archives.org என்ற தளம் சமீபத்தில் முடக்கப்பட்டிருந்தது . இறையருளால் அது தற்போது மீண்டும் செயல்பாட்டிற்கு வந்துள்ள நிலையில் மேலும் பல அரிய நூல்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன.ஆகவே, நம் இணைய நூலகத்தில் இனி தங்கு தடை இன்றி நாம் பதிவேற்றம் செய்த நூல்களை பார்க்கலாம், பதிவிறக்கம் செய்யலாம்.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

# முந்தைய இதழ்களை படிக்க அந்தந்த லிங்கை கிளிக் செய்யவும்

திருநெல்லை – புரட்டாசி

திருநெல்லை – ஐப்பசி

திருநெல்லை – கார்த்திகை

திருநெல்லை – மார்கழி

திருநெல்லை – தை

திருநெல்லை – மாசி

திருநெல்லை – பங்குனி

திருநெல்லை – சித்திரை

திருநெல்லை – வைகாசி

திருநெல்லை – ஆனி

திருநெல்லை – ஆடி

திருநெல்லை – ஆவணி

திருநெல்லை – புரட்டாசி

திருநெல்லை – ஐப்பசி

திருநெல்லை– கார்த்திகை

திருநெல்லை– மார்கழி